# கல்கி



## பகைவனுக்கும் அருளிய போப்பாண்டவர்

-ஸ்பெஷல் ரிப்போர்ட்

KALKI
2.2.86
ரூ.1.50

நானு ரிடையர் ஆனேன்? இப்பதான் புதுவாழ்க்கையே ஆரம்பமாகிறது! தோட்டத்தில் நடமாடுவது, ஸீஸனில் பாட்டுக் கச்சேரிகளுக்கு போவது, கடற்கரை பக்கம் உலாவியபடி அரசியலை அலசுவது, பேர குழந்தைகளுக்கு கதை சொல்வது, இன்னும் எத்தனையோ... இதையெல்லாம் செய்ய தினமும் இரண்டுமுறை ஹார்லிக்ஸ் பருகுகிறேன்.




சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

# டி.வி.யிலிருந்து தப்பிக்க ராஜீவுக்குச் சில யோசனைகள்

'டூப்' மனிதரை வைத்துக் கொள்ளக் கூடும்படிச் செய்யலாம்!

அரசியலிலும் நிர்வாகத்திலும் அலுத்துப் போன ராஜீவ் கண்ணாம்பூச்சி ஆடலாம்!

திருஷ்டி பரிகாரப் பொம்மை அட்டையைக் கட்டிக் கொண்டு திகைக்கச் செய்யலாம்!

டி.வீ.க்காரர்களின் யுக்தியையே கையாளலாம்!

தடங்கலுக்கு வருந்துகிறோம்

ராஜீவை டி.வி. படம் பிடித்தவருக்கு இரவு, பகல் இருபத்து நாலு மணி நேரமும் டி.வி.யில் ராஜீவின் படம் பார்க்கும் தண்டனையைக் கொடுக்கலாம்!



# “மாட்டுத் [illegible]ல்லா



* பள்ளியின் நுழைவு வாயில் இதுதான்!

## — ஓர் அரசு உயர்நிலைப் பள்ளியின் அவல நிலை!

நாகர்கோவிலிலிருந்து தெற்கு நோக்கிச் சுமார் 32 கி. மீ. பயணம் செய்தால், உதய மார்த்தாண்டம் என்ற ஊரை அடையலாம். இது ஒரு கடலோரக் கிராமம்.

முன்பு குமரி மாவட்டம் திருவிதாங்கூர் சமஸ்தானத்திற்கு உட்பட்டிருந்ததால், திருவிதாங்கூர் மன்னரான மார்த்தாண்ட வர்மாவின் பெயரே இக்கிராமத்திற்கும் அமைந்து, 'உதய மார்த்தாண்டம்' என்றாகி விட்டது.

பழமையான இக்கிராமத்தில், ஒரு பழமையான பள்ளிக்கூடமும் அமைந்துள்ளது. அப்பள்ளிக்கூடத்திற்கு இன்று 'அரசு உயர்நிலைப்பள்ளி' என்ற அங்கீகாரம் கிடைத்த பிறகும், பழைய திண்ணைப் பள்ளிக்கூடத்தை நினைவுபடுத்தும் வகையில்தான் காட்சியளிக்கிறது! சுமார் எட்டாயிரம் மக்கள் தொகையை உள்ளடக்கிய இக்கிராமத்தில், இப்படி ஓர் அரசு உயர்நிலைப் பள்ளியா என்று ஆச்சரியத்தோடு பார்க்கிறோம்.

இந்த அரசு உயர்நிலைப் பள்ளி, மூன்று ஓலைக் கூரைக் கட்டடங்களின் கீழ் இயங்கி வருகின்றது. இரண்டு கட்டடங்கள் தெற்கு வடக்காகவும், ஒரு கட்டடம் கிழக்கு மேற்காகவும் அமைந்திருக்கின்றன. இந்த மூன்று கட்டடங்களுக்குமிடையே நான்கு சாலைகள் செல்கின்றன! அந்தச் சாலைகளை ஒட்டித்தான் மூன்று கட்டடங்களும் அமைந்துள்ளன!

ஒரு கட்டடத்தை ஒட்டி அமைந்துள்ள அடுத்தகட்டடத்திற்குவரவேண்டுமென்றால், ஒவ்வொரு முறையும் அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் சரியாகப் பார்த்து, லாரியோ பஸ்ஸோ அல்லது வேறு வாகனங்களோ வருகிறதா என்று கவனித்து விட்டுத்தான் வரவேண்டும். இல்லையென்றால் அதில் அடிபட்டு அவதிப்பட வேண்டியதுதான்.

தெற்கு வடக்காக ஒரு நீண்ட வயதான கட்டடம். அதன் சுவர்களை வெறும் பச்சை மண்ணைக் குழைத்துக் கட்டியிருப்பார்கள் போலும்! மேலே, ஓலைக் கூரை! பக்கவாட்டில், ஆடிப் போன மரக் கதவுகள். மறு பக்கம், தேய்ந்து போன ஜன்னல் பலகைகள். சில இடங்களில் அது கூட இல்லாமல்... வெறும் மரச் சட்டங்கள் மட்டுமே மிஞ்சியிருக்கின்றன!

அந்தக் கட்டடத்தின் தெற்கு மூலையின் கீழ்ப்பக்க அஸ்திவாரக் கற்கள் கலைந்து, அந்தப் பக்கச் சுவரில் விரிசல் விழுந்திருக்கின்றது! எந்த மழைக்கு அந்தச் சுவர் சரிந்து விழும் என்று சொல்லவே முடியவில்லை. அதனை ஒட்டியே சத்துணவுக் கூடம்! அந்தச் சத்துணவுக் கூடத்தைப்(!?) பார்த்தாலே சத்துணவு என்ன, சாதாரண உணவைக் கூட மூன்று நாளைக்குச் சாப்பிட முடியாது. அந்தக் கட்டடத்தினுள்தான் உயர்நிலை வகுப்புக்களும், தலைமையாசிரியரின் அலுவலகமும் இயங்குகின்றன!

உயர்நிலைப் பள்ளி வகுப்புகள் நடைபெறும் கட்டடமே இந்த நிலையிலிருக்கிறதென்றால், ஏனைய வகுப்புகள் நடைபெறும் கட்டடங்களின் நிலைமையைப் பற்றிச் சொல்ல வேண்டுமா என்ன?

பள்ளிக்குள் சென்று பார்த்தால், கால் ஒடிந்த பெஞ்சுகள், வெளிறிப் போன கரும் பலகைகள், செம்மண் தரை, ஏதோ ஒரு சக்தியில் கீழே விழாமல் தாங்கி நிற்கும் ஓலைக் கூரை, சுற்றிலும் புதர் போன்று மண்டிக் கிடக்கும் முட்செடிகள், அசுத்தமான சுற்றுப்புறச் சூழ்நிலை, நெருக்கடியான இடம்... இதுதான் உதயமார்த்தாண்டம் அரசு உயர்நிலைப்பள்ளியின் சிறப்பு இயல்புகள்!

பள்ளிக்கூடக் கட்டடங்களைச் சுற்றியுள்ள முட்செடிகளில் விஷ ஜந்துக்கள் இருந்தால் கூட ஆச்சரியப்படுவதற்கில்லை! நாங்கள் சென்ற பொழுது மதியம் சுமார் பன்னிரண்டு மணியிருக்கும். வகுப்புகள் நடந்து கொண்டிருந்தன. கருத்தூன்றிப் படிக்கும்

# "தொழுவம் கூட இருக்குமுங்க..!"



* பள்ளிக்குள்ளேயும் கள்ளியும் கற்றாழையும்தான்...



* ரோடுதான் மாணவர்களின் விளையாட்டு மைதானம்

மாணவ — மாணவிகளின் கவனம் கூட, சாலையில், 'சர்... புர்...' என்று செல்லும் வாகனங்கள் எழுப்பும் ஹாரன் சப்தத்தினால், சிதறிப் போவதைக் கண்ணால் கண்டு வேதனையுற்று இதன் பூர்வீகக் கதையை அறிய, உதயமார்த்தாண்டத்தைச் சேர்ந்த என். இராசையன் என்பவரை அணுகினோம்.

அவர் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டவாறே, "இந்தப் பள்ளிக்கூடம், திருவிதாங்கூர் மன்னர் காலத்தில் கட்டப்பட்டதுங்க. முன்னால இது மலையாளப் பள்ளிக்கூடமாக இருந்தது. அப்புறம் இது நடுநிலைப் பள்ளியாகி நான்கு ஆண்டுகளுக்கு முன்புதான் உயர்நிலைப்பள்ளியாக மாற்றப்பட்டது. எப்படியும் இந்த ஸ்கூலுக்குச் சுமாரா எழுபத்தைஞ்சு வயசு இருக்குமுங்க...! இப்ப சுமார் ஐநூறு மாணவ — மாணவிங்க படிக்கிறாங்க...!

"தலைமையாசிரியரோடு மொத்தம் பதினேழு ஆசிரிய ஆசிரியைகள் பணியாற்றுகின்றனர். இவர்களில் ஏழு பேர் ஆசிரியைகள். இதுநாள் வரை, இந்தப் பள்ளிக்கூடத்திற்கு ஒரு கழிப்பிடமில்லை! ஊர் மக்களாகிய நாங்கள் எவ்வளவோ முயற்சி எடுத்ததன் பலனாக, இந்தச் சாலையின் மறு பக்கம் ஒரு கழிப்பிடம் கட்ட அரசு முன் வந்தது. அதுவும் இதுவரை முடியல்லீங்க...! இப்பவும் வேலை நடந்துக்கிட்டிருக்கு.

"மாணவர்கள், பள்ளிக்கூடத்தைச் சுற்றியுள்ள புளியமரம், தென்னந்தோப்புகளை அவசரக் கழிப்பிடமாகப் பயன்படுத்திக்கிறாங்க. மாணவிகளும், ஆசிரியைகளும் அருகிலுள்ள வீடுகளுக்குச் சென்று அங்குள்ள கழிப்பிடங்களைப் பயன்படுத்திக்கிறாங்க! இப்படித்தான் இதுநாள்வரை நடந்து வந்தது. ஒரு தடவை, மாவட்டக் கல்வி அதிகாரி, இந்த ஸ்கூலைப் பார்வையிட வந்த போது... சிறுநீர் கழிக்க இடமில்லாமல், கடைசியில், கடற்கரைக்குத்தான் ஓட வேண்டியதாக இருந்தது. அன்று அவர் பட்ட அவஸ்தையின் காரணமாகத்தான் கடைசியில் இப்பள்ளிக்கு ஒரு கழிப்பிடம் கட்ட முன் வந்தார்கள்.

"அதற்கு முன்பு ஒரு தடவை, இப்பள்ளித் தலைமையாசிரியரே தன்கையிலிருந்துஇருபது ரூபாய் செலவு செய்து, ஓலைக் கீற்றாலான ஒரு சின்னக் கழிப்பிட வசதியைச் செய்து கொடுத்தார். அதை யாரோ, இரவோடு இரவாக எரித்து விட்டனர். இந்த ஓலைக் கூரைக் கட்டடங்கள் ரோட்டோரத்தில் இருப்பதால், இச்சாலை வழியே செல்பவர்கள், புகை பிடித்துவிட்டு வீசி எறியும் சிகரெட், பீடியின் நெருப்பால், பல தடவை தீக்கிரையாக்கப்பட்டுள்ளன...!

"இந்தப் பள்ளியின் அலுவலகப் பணிகளைக் கவனிக்க கிளார்க், பியூன் என்று யாரும் கிடையாது! எல்லாமே தலைமையாசிரியரும் மற்ற ஆசிரிய — ஆசிரியைகளும்தான் கவனிக்கின்றனர்!" என்று ஆதங்கத்தோடு குறிப்பிட்டார், இராசையன்.

அவரைத் தொடர்ந்து, அதே ஊரைச் சேர்ந்த டாக்டர் இன்பசேகரன், இப்பள்ளியின் நிலைமையை விவரித்தார்:

"அறிவியல் ஆய்வுக்கூட வசதியோ, மாணவ — மாணவிகள் விளையாட இடமோ இல்லாத ஓர் அரசு உயர்நிலைப் பள்ளி தமிழ்நாட்டில் உண்டென்றால்... அது இந்தப்

பள்ளியாகத்தான் இருக்கும்! மாணவ—மாணவிகள் பள்ளியைத் தொட்டிருக்கும் சாலையில்தான் விளையாடுகின்றார்கள். கடந்த ஆண்டு. . இப்படித்தான் சாலையில் மாணவர்கள் விளையாடிக் கொண்டிருக்கும்பொழுது. வேகமாக வந்த லாரியில் ஒரு மாணவன் அடிபட்டு... அந்த இடத்திலேயே துடிதுடித்து இறந்தான்...!



ஸலாம்

"வசதி குறைந்த. ஏழை வீட்டுப் பிள்ளைகள்தான் இங்கே படிக்க வருகிறார்கள். செம்மண் தரையிலே உட்கார்ந்து இவர்கள் படிப்பதால், தினசரி ஓர் உடை மாற்ற வேண்டிய நிலைமை வேறு! இந்தச் செம்மண் தரையிலே உட்கார்ந்துதான், சத்துணவும் சாப்பிடவேண்டும். இவற்றையெல்லாம்பார்க்கப் பார்க்கப் பரிதாபமாக இருக்கும். மாட்டுத் தொழுவம் கூடக் கொஞ்சம் நல்லா, சுத்தமா இருக்கும். அதுமாதிரி கூட இந்தப் பள்ளி இல்லை.

"இதன் நிலைமையைப் பார்த்து. எங்கள் ஊரிலும் ஓர் அரசு உயர்நிலைப்பள்ளி இருக்கிறது என்று சொல்வதற்கே எங்களுக்கு வெட்கமாயிருக்கிறது. ஒரு வருஷம் இதில் தங்கள் பிள்ளைகளைப் படிக்க வைத்தவர்கள், அடுத்த வருஷம், இங்கிருந்து மூன்று மைல் தொலைவிலுள்ள மாங்கன்று, கருங்கல் — ஆகிய இடங்களிலுள்ள பள்ளிகளில் கொண்டு போய்ச் சேர்த்துவிடுகின்றனர். அதனால் இங்கே படிக்கும் மாணவ—மாணவிகளின் எண்ணிக்கையும் குறைந்து கொண்டே வருகிறது!" என்றார். அவர் குரலில், தன் ஊரில் இப்படி ஓர் அரசு உயர்நிலைப்பள்ளி அவல நிலையில் இருக்கின்றதே என்ற கவலை தொனித்தது!

அடுத்து. இந்தப் பள்ளியின் வளர்ச்சிக் குழு செயலாளர், மிடாலம் எம். ஏ. ஸலாம் அவர்களை அணுகி, "இந்தப் பள்ளியின் வளர்ச்சிக்கு நீங்கள் இதுவரை எடுத்தமுயற்சிகள், நடவடிக்கைகள், தீர்மானங்கள் என்னென்ன...?" என்று கேட்டதும், ஜவுளிக் கடைக்காரன் வாடிக்கையாளர்கள் முன்பு அடுக்கடுக்காகத் துணிகளை விரித்துப் போடுவது போன்று. இந்தப் பள்ளியின் வளர்ச்சிக்காக எடுத்த முயற்சிகள், கொடுத்த விண்ணப்பங்கள் ஆகியவற்றின் நகல்கள் அடங்கிய ஃபைல்களை, எங்கள் முன்பு விரித்துப் போட்டார்.

"இந்தப் பள்ளிக்கூடத்தைச் சுற்றிலும் சாலைகள் செல்வதோடு. இதற்கெனத் தனி இடவசதியும் இல்லாததால். இவ்வூர்ப் பொதுமக்கள் ஒன்று சேர்ந்து சற்றுத் தூரத்தில் ஐம்பது சென்ட் நிலத்தை இலவசமாக வழங்கியிருக்கிறார்கள். அந்த இடத்தில் புதிய கட்டடம் கட்ட வேண்டுமென்று நமது தமிழக முதலமைச்சர், தலைமைச் செயலர், கல்வித் துறைச் செயலர், பள்ளிக் கல்வி இயக்குநர், முதன்மைக் கல்வி அலுவலர் மற்றும் இது சம்பந்தப்பட்ட அனைவருக்கும் கடந்த மூன்றண்டுகளாகச் சுமார் 300 மனுக்களாவது எழுதியனுப்பியிருப்பேன். எல்லாம் கிணற்றில் போட்ட கற்களைப் போல் சலனமில்லாமல், சப்தமில்லாமல் கிடக்கின்றன!

"இதற்கிடையில், கடந்த 83 ஆம் ஆண்டு ஜூலை 4 ந் தேதி, பள்ளிக் கல்வி இயக்குனரிடமிருந்து. ஒரு கடிதம் வந்தது. அதில், 1983 — 84 நிதியாண்டில், இந்தப் பள்ளிக்குக் கட்டடம் கட்டுவது குறித்துப் பரிசீலிக்கப்படும் என்று எழுதியிருந்தது. அதைப் பார்த்து, எங்களுக்குச் சிறிது நம்பிக்கை பிறந்தது! எப்படியோ, தமிழக அரசின் கடைக்கண் பார்வை பட்டுவிட்டது. இனிக் கவலையில்லை என்று மகிழ்ச்சியடைந்தோம். ஆனால், ரொம்பத் தாமதமானதும்... கடந்த மாதம் நான் சென்னை சென்று இதுபற்றி விசாரித்த போது, 'அப்படி எதுவுமில்லையே!' என்று சம்பந்தப்பட்டவர்களிடமிருந்து பதில் வந்தது. எப்படியிருக்கிறது பார்த்தீர்களா? காலையில் ஒரு பேச்சு, மாலையில் ஒரு பேச்சு!' இதுதான் இந்த அரசின் மூச்சு...!



• வால்போல் ஒட்டியிருக்கும் சத்துணவுக் கூடம்

"இந்தப் பள்ளியின் பிரச்னைகளை இரண்டு வகைப்படுத்தி. அவற்றிற்குத் தீர்வு காணும் முயற்சியில் ஈடுபட்டு வருகின்றோம். ஒன்று, பொதுமக்களால் பள்ளிக்கு அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டிருக்கும் ஐம்பது சென்ட் நிலத்தில் புதிய கட்டடம் கட்டுதல். அடுத்தது. இந்தப் பள்ளியைச் சுற்றிலும் மூன்று புறமும் சென்று கொண்டிருக்கும் சாலைகளில், உதயமார்த்தாண்டம் ஜங்ஷனில் இருந்து கடற்கரைக்குச் செல்லும் சாலையில், காஞூர் செல்லும் சாலை பிரியும் இடத்தில் சிறிது பழுது பார்த்து... சரி செய்து பள்ளிக்கு நடுவே செல்லும் பாதையை அடைத்து விடுவது! இவ்விரு பணிகளுக்கும் நாங்கள் விடாமல் முயற்சி எடுத்து வருகிறோம்! நாங்கள் நேரில் செல்லும்போது, 'முடித்துத் தருகிறேன்!' என்று சொல்லும் அரசு அதிகாரிகளும் அமைச்சர்களும் மறுநிமிடமே அதை மறந்துவிடுகின்றனர்!

"இவ்வளவு வசதியில்லாத இப்பள்ளி, கடந்த இரண்டு ஆண்டுகளாகத் தொடர்ந்து



* இன்பசேகரன்



* சுற்றுச் சுவர் இல்லாத வகுப்பறைகள்....

இருமுறை பள்ளி இறுதித் தேர்வில் 100 சதவிகித வெற்றியைப் பெற்றுக் கல்வி அமைச்சரிடமிருந்து, நற்சான்றிதழும் பெற்றுள்ளது! வேதனையிலும், இது சற்று ஆறுதலை அளித்தாலும் இன்னும் எத்தனை நாட்களுக்குத் 'தான் இப்பள்ளியின் பரிதாபத்தைப் பார்த்துக் கொண்டிருப்பது...?'' என்று முடித்தார், எம். ஏ. ஸலாம். இப்பள்ளியின் வளர்ச்சிக்காகத் தான் எடுத்த முயற்சிகள் எல்லாம் வீண் விரயமாகிவிட்டதே என்ற வேதனை அவர் பேச்சில் பளிச்சிட்டது!

இந்தப் பள்ளிக்குக் கான்கிரீட் கட்டடம் கட்டி மொஸைக் தரை போட்டுத் தர வேண்டுமென்று இவர்கள் கேட்கவில்லை! இருக்கின்ற கட்டடங்களை உறுதியானதாக்கி, சுற்றியுள்ள முட்செடிகளை அகற்றிக் கழிப்பிட வசதி, விளையாட்டு மைதானம், ஆய்வுக்கூட வசதிகளை உருவாக்கி — அலுவலகப் பணிகளுக்கு ஆட்களை நியமித்துத் தரவேண்டும் என்றுதான் கேட்கிறார்கள்.

ஒருவேளை, வெள்ளம் வருமுன்பே தடுப்பு முயற்சிகளை மேற்கொள்ளாமல், வெள்ளம் வந்து தத்தளிக்கும்போது உணவுப் பொட்டலங்களை வழங்குவதுபோல், உருக்குலைந்து நிற்கும் இந்தப் பள்ளிக் கட்டடங்கள் இடிந்து விழுந்து, பல இளம் பிஞ்சு உயிர்களைப் பலி வாங்கிய பின்தான் புதிய கட்டடம் கட்ட வேண்டும் என்று நமது மாட்சிமை தங்கிய அரசாங்கம் நினைக்கிறதோ என்னவோ...? யார் கண்டது?

புகைப்படங்கள், செய்தித் தொகுப்பு:

குளச்சல் இப்ராஹிம்.

# பகைவனுக்கும் அருளிய போப்பாண்டவர்



பத்து நாள் இந்திய விஜயத்தில் போப் ஆண்டவர் ஜான் பால் II பிப்ரவரி ஐந்தாம் தேதி, சென்னை வருகிறார்.

* இந்திரா காந்தி, மட்டுமின்றி ஜனாதிபதி ஜெயில் சிங்கும் ரோம் சென்றிருந்த போது, போப் ஆண்டவரை இந்தியா வரும்படி அழைத்திருந்தார்.
* 'அப்பா' என்று அர்த்தம் கொண்ட லத்தீன் வார்த்தையான 'Papa' என்கிற சொல்லிலிருந்து பிறந்ததுதான் 'போப்.'



* இந்தியா வரும் போப் ஜான் பால் II ஐ தமிழில் திருத்தந்தை இரண்டாம் அருட் சின்னப்பர் என்று குறிப்பிடுகிறார்கள். இவர் 264 வது போப். புனித ராயப்பர் என்று அழைக்கப்படும் செயின்ட் பீட்டர் தான் முதல் போப்.
* போலந்து ஒரு கம்யூனிஸ்ட் நாடு. ஆனால் அங்கேதான் உலகிலேயே மிக அதிகமான கத்தோலிக்கர்கள் வாழ்கிறார்கள். போராட்டங்கள் நிறைந்தது போலந்தின் வரலாறு. இன்றைய போப் போலந்தைச் சேர்ந்த முதல் போப் என்கிற பெருமை உடையவர்.
* அப்பா ஓர் ராணுவ அதிகாரி. பெயர்—கரோல். அம்மா—எமிலியா. இவர்களுக்கு போலந்தில் வாடோவிச் என்கிற ஊரில் சர்ச்சுக்குப் பக்கத்து வீட்டில் 1920 மே 18ம் தேதி பிறந்தார் போப் ஜான் பால். பெற்றோர் வைத்த பெயர் கரோல்' ஜோஸப் வொஜ்டிலா. செல்லப் பெயர் 'லோலெக்.'

* முகமது அலி அக்ஸாவைச் சிறையில் சந்தித்த போது...







* நோயுற்ற முதியவரை அன்புடன் சமாதானப் படுத்துகிறார்.

* சின்ன வயதிலேயே லோலக் படு சுட்டி. படிப்பில் சிறந்ததோடு கால் பந்து, நீச்சல், பனிக் கட்டி மீது சறுக்குதல், என்று பல வற்றிலும் அசாத்தியத் திறமை இருந்தது. பிரமாதமாய் நடித்தான். பள்ளிக்கூட நாடகமன்றத்தில் முக்கிய பங்கு வகித்தான். ஒரு தடவை நடிக்க வேண்டிய ஒரு பையன் கடைசி நிமிஷத்தில் வராது போகவே தன் பாத்திரத்தை மட்டுமின்றி, அவன் பாத்திரத்தையும் சேர்ந்து நடித்து, பாராட்டுப் பெற்றான்.

* 9 வயதாயிருக்கும்போது, அம்மா செத்துப் போனாள். பதிமூன்றாவது வயதில் அண்ணன் எட்மண்டு நச்சுக் காய்ச்சல் வந்து போய்விட்டான்.

* 1939 வாக்கில் ஹிட்லரின் படைகள் யூதர்களை நாசம் செய்தபோது, யூதர்களுக்கு உதவ ஒரு ரகசியக் குழு அமைக்கப்பட்டது. ஆபத்தான இந்தப் பணியில் துணிவுடன் இறங்கினான் இளைஞன் வொஜ்டிலா. நாஜிகள், இவனைக் கொல்லக் குறிவைத்த நிலையிலும், பலரை மறைவிடங்களுக்கு அழைத்துக் கொண்டு போய் அவர்கள் உயிரைக் காப்பாற்றினான் அந்த இளைஞன்.

* அப்பா ராணுவத்திலிருந்து ஓய்வு பெற்றதும், பென்ஷனைக் கொண்டு காலத்தை ஓட்டுவது ரொம்பக் கஷ்டமாய் இருந்தது. மேலும் வேலை இன்றிச் சும்மா இருந்தவர்களை ஜெர்மனிக்குக் கட்டாயமாக அழைத்துச் சென்று அடிமைகளாக உழைக்கச் செய்தனர். இளைஞன் வொஜ்டிலா கல் உடைக்கிற வேலைக்கு அனுப்பப்பட்டான். கடும் குளிரிலும், கைகளிலும், முகத்திலும் தைலத்தைப் பூசிக் கொண்டு, முரட்டுத் துணியால் உடலைப் போர்த்திக் கொண்டு மாங்கு, மாங்கென்று கல் உடைத்தான். சோர்ந்து விழுகிற வயதான தொழிலாளி

* இளம் வயதில்...



## சென்னையில்...

பிப்ரவரி 5ம் தேதி காலை 11 மணியளவில் சென்னைக்கு வரவிருக்கும் போப், ராஜாஜி ஹாலில் பல்வேறு மதத் தலைவர்களையும் சந்திப்பார். ராஜாஜி ஹாலில் பல்வேறு மத போதனைகளும் அட்டைகளில் எழுதித் தொங்க விடப்படும். பூ அலங்காரங்கள் நமது முறையில் அமையும். பஞ்ச வாத்யங்கள் முழங்க, பல்வேறு மாநில உடைகள் அணிந்த ஐநூறு மாணவிகள் வரவேற்புத் தருவார்கள். சிலர் பன்னீர் தெளிப்பார்கள். உள்ளே சென்றதும் போப் குத்து விளக்கேற்றி வைப்பார். பின் ஆர்ச் பிஷப் இல்லம் சென்று மதிய உணவு; ஓய்வு. அப்புறம் சாந்தோம் சர்ச். மூன்றரைக்கு மெரீனாவில் பிரார்த்தனை. ஏழு மணிக்கு விமான நிலையத்தில் வழியனுப்புதல்.

போப் வருகையின்போது அண்ணா சாலையிலும், மெரீனாவிலும் 25 வரவேற்பு வளைவுகள் வைக்கப்படும். ஆயிரம் விளக்குப்பகுதியில்போப்புக்குஅறுபத்தைந்துவயதைக்குறிக்கும் வகையில் 65 அடி உயரத்திற்கு அவரின் கட் அவுட் ஒன்று வைக்கப்படும். சைதாப்பேட்டை மறைமலை அடிகள் பாலம் 65 ஜோடி இந்திய, வாடிகன் தேசியக் கொடிகளால் அலங்கரிக்கப்படும். (உபயம்— வி.ஜி.பி.) 'தமிழகம் போப் ஆண்டவரை வரவேற்கிறது' என்று நகரிலுள்ள சினிமா தியேட்டர்களில் ஸ்லைடுகளும் போடப் -போகிறார்கள்.

களை ஒய்வெடுக்கச் சொல்லிவிட்டு, அவர்கள் பங்கு வேலையையும் சேர்த்து இவன் செய்வான்.

* கல்லுடைக்கிற வேலையிலிருந்து வேறிடத்துக்கு மாற்றம். நீண்ட கொம்பின் இரண்டு பக்கத்திலும் வாளிகளில் சுண்ணாம்பை நிரப்பித் தோளில் தூக்கிக் கொண்டு போக வேண்டும். சுண்ணாம்பிலேயே உழலுவதால் கால், கைகளில் கொப்புளங்கள். தோளில் தோல் உரியும். கஷ்டப்பட்டுச்சம்பாதித்தபணத்தில்சாப்பாடு வாங்கிக் கொண்டு வந்து, சூடு படுத்தி இருதய நோயினால் படுத்த படுக்கையாய் வீட்டில் இருந்த அப்பாவுக்குக் கொடுத்துத் தானும் சாப்பிடுவான்.

* கவிதை எழுதும் திறமையும் பெற்றிருந்த வொஜ்டிலா, தன் கல் உடைக்கிற அனுபவத்தைச் சொல்கிற கவிதை இது:

> விரிசல்களும் கொப்புளங்களும்
> நிறைந்து
> சிரமத்தில் தோய்ந்த கரங்கள்
> சோர்வுற்ற கண்கள்
> பெருமூச்சுடன் நடுங்கும் உடல்கள்
> முடிச்சிடப்பட்டது போன்ற
> முறுக்கேறின தசைகள்

# போப் தேர்ந்தெடுக்கப்படுவது எப்படி?

எண்பது வயதிற்குட்பட்ட கார்டினல்களுக்கு மட்டுமே 'போப்'பைத் தேர்ந்தெடுக்கிற தகுதியும், உரிமையும் உண்டு. இவர்கள் அதிகபட்சமாக 120 பேர்தான் இருப்பார்கள். (கார்டினல் என்பவர் பல் வேறு துறைகளிலும் போப்பிற்கு ஆலோசனை சொல்கிற பொறுப்பில் இருப்பவர்) ஒரு போப் மறைந்ததும் அடுத்த பதினைந்து நாட்களுக்குள் உலகெங்குமுள்ள கார்டினல்கள் வாடிகனில்கூடுவார்கள். தேர்தல் நடக்குமிடம் வாடிகனிலுள்ள சிஸ்டைன் ஆலயம். உள்ளே கார்டினல்கள் தவிர, மற்றவர்களுக்கு அனுமதியில்லை. உள்ளே சென்ற கார்டினல்கள், தேர்தல் முடியும் வரை எக்காரணம் கொண்டும் வெளியில் வர முடியாது. உள்ளே நடப்பதை ரகசியமாய் வைத்திருப்போம் என்று சத்தியப் பிரமாணம் எடுத்துக் கொள்வார்கள். அப்புறம் ஒட்டெடுப்பு நடைபெறும். ஒவ்வொரு கார்டினலும் போப் பதவிக்குத் தகுதியானவர் என்று யாரை எண்ணுகிறாரோ, அவர் பெயரை எழுதிப் பெட்டியில் போட வேண்டும். மூன்றில் இரண்டு பங்கிற்கு ஓர் ஒட்டு அதிகம் பெறுகிறவர் போப் ஆகிறார். தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் ஆலயப் புகைக் கூண்டிலிருந்து வெண் புகை வெளி வரும். வெளியில் செயிண்ட் பீட்டர் சதுக்கத்தில் கூடியுள்ள ஆயிரக்கணக்கான மக்கள் மகிழ்ச்சியில் மிதப்பார்கள். தேவையான அளவு ஒட்டுகளை ஒருவரும் பெறவில்லையெனில், மறுபடியும் ஒட்டெடுப்பு நடக்கும். அப்போது புகைக் கூண்டில் கறுப்புப் புகை வரும். தற்போதைய போப் தேர்ந்தெடுக்கப்பட்ட போது, எட்டுத்தடவை தேர்தலைத் திரும்பத் திரும்ப நடத்த வேண்டியிருந்தது. தேர்ந்தெடுக்கப்பட்டவர், தம் விருப்பத்திற்கேற்ப புதுப் பெயர் சூட்டிக் கொள்வார். பல்வேறு அளவுகளில் வெள்ளை அங்கிகள் தயாராய் இருக்கும். புது போப் தமக்கேற்ற சரியான அளவில் அங்கியைத் தேர்ந்தெடுத்து அணிந்து கொள்வார். ஆலய மேல் மாடத்திலிருந்து மக்களுக்குக் காட்சி தருவார்.



சகதியில் கணுக்கால்வரை ஆழ்ந்து
விட்ட மிதியடிகள்

ஆனாலும்
இது வேதனை கலந்த பேரழகு!

கவிதை எழுதும்போது புனை பெயர்: ஆன்றே ஜாவின்.

* நோய்வாய்ப்பட்ட தந்தை மறைந்ததும் தனி மரமாகி விட்ட வொஜ்டிலா, தீவிரமாய் இறைபணியில்ஈடுப்பட முடிவெடுத்து அதற்கென ஓர் இயக்கமும் ஆரம்பித்தார். 46 ம் ஆண்டு நவம்பர் முதல் தேதி, கிராக்கோவ் நகர ஆர்ச் பிஷப்பின் முன் தம்மை முழுமையாய் அர்பணித்துக் கொண்டார். பெயர் ஃபாதர் வொஜ்டிலா.

* மேலே படிப்பைத் தொடர, ஃபாதர் வொஜ்டிலாவை ரோமுக்கு அனுப்பினார் ஆர்ச் பிஷப். 'செயின்ட் பீட்டரின் கண்ணோட்டத்தில் விசுவாச மறைக் கோட்பாடு' என்ற தலைப்பில் ஆராய்ச்சி செய்து, டாக்டர் பட்டம் பெற்றார். கவிதை எழுதுவதும் தொடர்ந்தது.

* வொஜ்டிலா படு எளிமையான மனிதர். ஒரு தடவை இவரை எதிர்பார்த்து ஓர் ஊரில் வரவேற்புக் குழு காத்திருந்தது. இவர் வருகிறாரா என்று ஒவ்வொரு டாக்ஸியாய் பார்த்துக் கொண்டிருந்த போது, யாரும் எதிர்பாராதவிதமாக ஒற்றைக் குதிரை வண்டியில் வந்து இறங்கினார். கையில் சிறிய பயணப் பையும், சில புத்தகங்களும்தான் இருந்தன. அதைக் கண்ட ஒருவர் மற்ற சுமைகளை எடுத்து வருவதற்காக வண்டிக்குச் சென்றபோது அங்கு ஒன்றும் இல்லை. வெறுங் கையோடு திரும்பினார்.

* படிப்படியாய்ப் பல பொறுப்புக்கள். 39 வது வயதில் துணை பிஷப். 44 ம் வயதில் பிஷப். அடுத்த நாலாவது வருஷம் கார்டினல். 1978 அக்டோபரில் 'போப்' ஆனதும், இரண்டாம் ஜான் பால் என்கிற பெயரை ஏற்றுக் கொண்டார்.

* 1981 மே மாதம் 13 ம் நாள் புதன்கிழமை ஒரு பயங்கரமான நாள். அன்று மாலை செயின்ட் பீட்டர் சதுக்கத்தில் போப் ஆண்டவரைத் தரிசிக்க மக்கள் காத்துக் கொண்டிருந்தனர். சரியாய் ஐந்து மணிக்கு போப் ஆண்டவர் தம் வெள்ளைக் காரில் வந்தார். திடீரெனத் துப்பாக்கிச் சத்தம். ஒரே பரபரப்பு. போப் பூவாய்ச் சுருண்டு விழுந்தார். ஒரு குண்டு வயிற்றில் நுழைந்து, குடலைச் சிதைத்து, வெளியில் வந்தது; இன்னொரு குண்டு, ஆசீர்வதிக்கிற கையைப் பதம் பார்த்தது. இன்னும் இரண்டு குண்டுகளில் ஒன்று ஆன் ஓடர் என்கிற அமெரிக்கப் பெண்ணையும், மற்றது இருபத்தியொரு வயதான ரோஸ் ஹால் என்கிற ஜமைக்கா பெண்ணையும் காயப் படுத்தின. ரோமில் ஜெமெல்லி ஆஸ்பத்திரியில் ஐந்தே கால் மணி நேர அறுவைச் சிகிச்சை வெற்றிகரமாய் முடிந்தது. நினைவு திரும்பியதும் போப் கூறியது: "யாரென்று தெரியாத அச்சகோதரனை நான் மனதார மன்னிக்கிறேன். தந்தையே! அவர் தெரியாது செய்கிறார். அவரை மன்னிப்பீராக!" சுட்டவன் முகமது அலி அக்ஸா என்கிற துருக்கி நாட்டவன் அவனைச் சிறையில் தனியே சந்தித்து தவறை உணர்த்தி, ஆசியும் வழங்கினார் போப்!

* உலகின் பல நாடுகளுக்கும் சென்று அருட் புன்னகை சிந்தி கத்தோலிக்கர்கள் மட்டுமின்றி வேறு பல மதத்தினரின் அன்பையும், மதிப்பையும் பெற்றுள்ள போப் ஜான் பாலுக்கு ஆங்கிலம், இத்தாலியன், ஜெர்மன், பிரெஞ்சு, போலிஷ் மொழிகள் தெரியும்.

தொகுப்பு: ஜூலி



அடுத்த இதழில்...

# இந்தியாவுக்கு டாலர்களை அள்ளித்தரும் ஆடைகள்!

கவர்ஸ்டோரி

# மாதம் ஒரு மாவட்டம்

## கல்கி ஏற்கும் சமுதாயப் பணி




# பெரியார் மாவட்ட மக்களுக்கு...

கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியான 'மாதம் ஒரு மாவட்டம்' திட்டத்தின் கீழ் இந்த மாதம் பெரியார் மாவட்டத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறோம்.

அண்மையில் புதிதாக உதயமான உங்கள் பெரியார் மாவட்டம் உண்மையிலேயே ஒரு மாவட்டத்திற்கான முழு வசதிகளையும் பெற்றுவிட்டதா? நிச்சயம் பல குறைபாடுகள் இருக்கும். தவிர, உங்கள் ஊரில் அல்லது மாவட்டத்தில் ஆண்டாண்டு காலமாகத் தீர்க்கப்படாத பிரச்னைகளும் இருக்கும்.

எத்தனையோ முறை மனுக்கள் எழுதியும், அதிகாரிகளிடமும், எம். எல். ஏக்கள் அல்லது அமைச்சர்களிடம் முறையிட்டும் தனி நபருக்கு நீதி கிடைக்கவில்லை என்றோ, அல்லது பொதுப் பிரச்னைகள் தீரவில்லை என்றோ மனம் குமுறிக் கொண்டிருப்பீர்கள். அல்லது உங்கள் மாவட்டத்திலுள்ள சிறப்பியல்புகள் பற்றியும், தனி மனிதர்களின் சாதனைகள் பற்றியும் வெளி உலகத்துக்குத் தெரியவில்லை என்றும் நீங்கள் ஏக்கப்பட்டுக் கொண்டிருக்கலாம். இவை பற்றியெல்லாம் நன்கு சிந்தித்துச் சுருக்கமாகக் கல்கி அலுவலகத்திற்குக் கடிதம் எழுதுங்கள். பெரியார் மாவட்டத்திலுள்ள ஒவ்வொருவரும் தத்தமது ஊர்களிலுள்ள பொதுப் பிரச்னைகளையும், அரசாங்கத்தின் மெத்தனப் போக்கையும் அநீதிகளையும் முழு முகவரியோடு எங்களுக்கு எழுதலாம்.

உங்களுடைய கடிதங்களையெல்லாம் பரிசிலனை செய்த பிறகு, முக்கியமானவற்றைத் தேர்ந்தெடுத்து கல்கி இதழின் பிரதிநிதிகள் பெரியார் மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்வார்கள்; உங்களைச் சந்திப்பார்கள். அவர்கள் உங்களைச் சந்திக்க வரும் தேதி உங்கள் அனைவருக்கும் தனித்தனிக் கடிதங்கள் மூலம் தெரிவிக்கப்படும். அப்போது நீங்கள் அவர்களிடம் ஆதாரங்களைக் காட்டலாம்; பிரச்னைக்குரிய இடங்களுக்கு அழைத்துச் சென்று காண்பிக்கலாம். பின்னர் நமது பிரதிநிதிகள் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் அல்லது அரசியல்வாதிகளைச் சந்திக்க முயற்சி செய்வார்கள். அவையெல்லாம் கட்டுரைகளாகவும், பேட்டிகளாகவும், புகைப்படங்களாகவும் கல்கியில் பிரசுரமாகும்.

எல்லாவற்றையும் பிரசுரிக்கவோ அல்லது எல்லாப் பிரச்னைகளுக்கும் தீர்வு கண்டுவிடவோ முடியாது என்றாலும் அவற்றையெல்லாம் வெளிச்சத்திற்குக் கொண்டு வருவதின் மூலம் அரசின் கவனத்தைத் திருப்பலாமல்லவா! எனவே உடனடியாக எழுதி அனுப்புங்கள்.

**பெரியார் மாவட்டம் பற்றிய பிரச்னைகளும், அநீதிகளும், சாதனைகளும் தாங்கிய உங்கள் கடிதங்கள் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 20.2.86. உறையின்மேல் 'மாதம் ஒரு மாவட்டம் — பெரியார் மாவட்டம்' என்று அவசியம் குறிப்பிட மறந்து விடாதீர்கள்.**

**— ஆசிரியர்.**

பி. கு: மதுரை மாவட்டம் பற்றிய குறைகளைக் கண்டறிவதற்காக பிப்ரவரி இரண்டாவது வாரத்தில் நமது பிரதிநிதிகள் சுற்றுப்பயணம் செய்ய இருக்கிறார்கள். அதுபற்றிய கட்டுரைகளும் செய்திகளும் மார்ச் மாத கல்கி இதழ்களில் வெளிவரும். நூற்றுக்கணக்கில் கடிதங்கள் எழுதி ஒத்துழைப்புத் தந்த மதுரை மாவட்ட மக்கள் அனைவருக்கும் மனமார்ந்த நன்றி.



கல்கி

1986 பிப்ரவரி 2
மலர் 44 இதழ் 27
குரோதன தை 20



# நமது கல்விக்குக் காந்தியைத் தெரியாது!

டெபுடி தாசில்தார் பதவிக்கு விண்ணப்பம் செய்திருந்த ஒரு இரட்டைப் பட்டதாரியிடம், "காந்தி என்று பெயர் வைத்துக் கொண்டிருக்கிறாயே, காந்தி யார் தெரியுமா?" என்று கேட்டபோது விழித்தாராம்! 'மோகன் தாஸ்' என்றதும் நமது உயர் போலீஸ் அதிகாரி ஒருவரைத்தான் நினைவு கூர்ந்தாராம்; அண்ணலைப் பற்றி அவருக்குத் தெரியவில்லை!

'இது ஏதோ அபூர்வமாகக் காணப்படுகிற விஷயம்; எல்லாருமே இத்தனை அசடுகளாக இருக்க மாட்டார்கள்' என்று வாதாடலாம். ஆனால் அப்படி வாதாடுகிறவர்களே நமது கல்வியின் தரம் அப்படியொன்றும் பெருமைப்படும்படியாக இல்லை என்பதையும் ஒப்புக் கொள்வார்கள். தேசத் தந்தையைக் கூடத் தெரியாத ஒரு இரட்டைப் பட்டதாரியை உருவாக்குகிற இந்தக் கல்வி முறையை மாற்றி அமைக்க வேண்டும் என்றுதான் நமது பிரதமரும் முயற்சி எடுத்துக் கொண்டு அது பற்றி நாடு தழுவிய விவாதங்களையும் ஊக்குவித்திருக்கிறார். இந்தச் சந்தர்ப்பத்தில் தமிழக ஆளுனரை ஒரு பக்கமும் சென்னை பல்கலைக் கழகத் துணை வேந்தர் சுந்தரேசனை மறுபுறமும் அமர வைத்துக் கொண்டு ஸ்ரீ சத்ய சாயி பாபா அண்மையில் சென்னையில் நிகழ்த்திய பேருரை மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது.

"மார்க் போடும் முறையை நாம் அமுல்படுத்த ஆரம்பித்தபோதே மாணவர்களின் தரத்தைக் குறைக்கவும் ஆரம்பித்துவிட்டோம்" என்றார் பாபா. "30 அல்லது 35 சதம் வாங்கினால் போதும்; பரீட்சையில் தேறிவிடலாம் என்று கூறியபோதே, 30 சதம் சரியாக எழுதினால் போதும்; 70 சதம் தவறாக எழுதலாம் என்ற எண்ணத்தை விதைத்து விட்டோம்! போதாக்குறைக்கு கிரேஸ் மார்க் வேறு! எல்லாம் சேர்ந்து மாணவர்களுக்குக் கல்வி கற்க வேண்டும், ஞானம் அடைய வேண்டும் என்ற ஆர்வம் போய்ப் பரீட்சையில் தேறும் அளவுக்குப் படித்தால் போதும் என்ற எண்ணம் ஏற்பட்டுவிட்டது.

"தெலுங்கிலே ஒரு பழமொழி உண்டு. 'நாட்டுப் பெண் கறுப்பு என்றால் குலமே கறுப்புத்தான்' என்று. நிறம் கறுப்பானால் பாதகமில்லை; ஆனால் மாணவர் குலம் சரியில்லை என்றால் தேசத்தின் எதிர்காலமே அல்லவா பாழாகிவிடும்! ஆனால் இதற்காக மாணவர்களைக் குறை கூற முடியாது. அவர்கள் மலைப்பிரதேசத்தில் ஆங்காங்கிருக்கும் பாறைகள் மாதிரி. அவர்களை உருவாக்குகிற பொறுப்பில் உள்ள சிற்பிகள் அழகிய வடிவங்களையும் செதுக்கலாம்; அல்லது அவலட்சண உருவங்களையும் படைக்கலாம்.

"மெக்காலே என்ற ஒருவர் பிரிட்டிஷ் ஆட்சி இங்கு வேரூன்ற ஒரு குமாஸ்தா பட்டாளத்தை உருவாக்கும் பொறுப்பில் இருந்தார். அவர் அதைச் சாதிக்க ஒரு கல்வித் திட்டத்தை உருவாக்கினார். அதையே நாம் இன்னமும் கட்டிக் கொண்டு அழுகிறோம். அன்று அரசாங்க வேலைகளை ஏற்றுச் செய்ய ஒரு கல்வி முறை உருவாக்கப்பட்டது. இன்றோ அந்தக் கல்வி முறை தோற்றுவிக்கும் பட்டதாரிகளுக்காக அரசாங்க உத்யோகங்களை அதிகரித்துக் கொண்டே போக வேண்டியிருக்கிறது.

"லஞ்சமோ, நன்கொடையோ பல்லாயிரக் கணக்கில், ஏன், லட்சக் கணக்கில்














ஜனவரி 25ந்தேதி முதல் முரசொலி மீண்டும் வெளிவரும் — கருணாநிதி

---

கூடக் கொடுத்து மருத்துவக் கல்லூரியில் இடம் பெறும் ஒரு மாணவன் நாளை படித்துப் பட்டம் பெற்ற பிறகு சமுதாய உணர்வோடு செயலாற்றுவானா? போட்ட முதலைத் திரும்பப் பெற வேண்டும் என்ற சுயநல, வியாபார நோக்குதானே மேலோங்கி இருக்கும்?

''கல்லூரித் தேர்தல்கள் பொதுத் தேர்தல்களைவிட மோசமாகிவிட்டன. யூனியன் என்பதன் பொருள் இணைப்பது அல்லது பிணைப்பது. ஆனால் நமது யூனியன்களால் பிளவுகளும், பூசல்களும், வெறுப்புகளுமே வளர்கின்றன. இந்த யூனியன் விவகாரம் வேண்டாம் என்று மாணவர்களிடம் கூற ஆசிரியர்கள் தார்மீக பலம் அற்றவர்களாய் இருக்கிறார்கள். காரணம், அவர்களே யூனியன் அமைத்துப் போராடிக் கொண்டிருப்பது தான்.

''தேச பக்தியையும் எம்மதமும் சம்மதம் என்ற அடிப்படையில் இறைவனிடம் பய பக்தியையும்; நல்லொழுக்கத்தையும் ஊட்டாத கல்வியினால் ஒருவிதப் பிரயோஜனமும் இல்லை. கல்வி என்பது அறிவைப் பெறுவது மட்டுமல்ல; அந்த அறிவை சமுதாய நலனுக்கு எப்படிப் பயன்படுத்துவது என்று கற்றுத் தருவதாகவும் அமைய வேண்டும். மாணவர்கள் உள்ளங்களில் மனிதாபிமானமும் சமுதாயத்தின் மீது பிரேமையும் பொங்க வேண்டும்.''

பெற்றோர்களையும் விட்டு வைக்கவில்லை, பாபா: ''குழந்தைகளுக்குச் சுதந்திரம் கொடுத்து வளர்க்க வேண்டியதுதான். ஆனால் அது பொறுப்புணர்வுடன் கூடிய சுதந்திர மாக இருக்க வேண்டும்.

''பாட திட்டங்கள் அனைத்திந்திய ரீதியில் அமையட்டும். சென்னைவாசி பெங்களூருக்கோ பாட்டியாலாவுக்கோ மாற்றலானால் கூட நமது குழந்தைகளின் படிப்பு என்ன ஆவது என்ற கவலை அவருக்கு இருக்கக் கூடாது.''

அனைத்திலும் முக்கியமான கருத்தாக பாபா கடைசியாகக் கூறிய யோசனை, கல்வியை அரசின் பிடியிலிருந்தும், அரசியல்வாதிகள் பிடியிலிருந்தும் விடுவியுங்கள் என்பதுதான். 'சட்ட மன்றங்கள் போலவும், நீதி மன்றங்கள் போலவும் கல்வித் துறையும் சுதந்திரமாக இயங்க அனுமதியுங்கள்' என்றார். ஆரம்ப கட்டமாக உயர் கல்வியைப் பொறுத்தமட்டிலாவது பாபாவின் இந்த யோசனையை அரசு ஏற்று அமல்படுத்துவது நாட்டின் எதிர்காலத்துக்கு நல்லது.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

# "கைதட்டி

**ஐம்பத்து நான்கு மணி நேரம் தொடர்ந்து கை தட்டி, கின்னஸின் முந்தைய சாதனையை முறியடித்திருக்கிறார் ஜெயராமன். பெரம்பலூருக்குப் பக்கத்திலிருக்கும் வேப்பூரிலுள்ள இந்தியன் ஓவர்சீஸ் வங்கியில் கிராமவளர்ச்சி அதிகாரியாகப் பணியாற்றும் அவருக்கு இப்படிப்பட்டதோர் எண்ணம் எப்படி வந்தது? அவரைச் சந்தித்த போது.......**

"கல்கி 12.5.85 இதழைப் படித்தபோது அதில் கின்னஸ் புத்தகத்தின் 'லேட்டஸ்ட்' பதிப்பிலிருந்து சில சாதனைகளைப் பட்டியலிட்டுக் கொடுத்திருந்ததைப் பார்த்தேன். அதைப் படித்ததும் நாமும் ஏன் ஒரு சாதனை ஏற்படுத்தக் கூடாது' என்று" யோசிக்கலானேன்.

"முயற்சியின் முதல் படியாக கல்கியில் குறிப்பிட்டிருந்த ஹிக்கின்பாதம்ஸ"க்கு எழுதி கின்னஸ் புத்தகத்தை வாங்கினேன். என் நோக்கத்தை வெளிப்படுத்தினால் மற்றவர்கள் கிண்டல் செய்வார்களே என்று கூச்சப்பட்டுக் கொண்டு சும்மா பொழுது போக்குக்காகத்தான் வாங்குகிறேன் என்று என் மனைவி உள்பட அனைவரிடமும் சொன்னேன். அப்புத்தகத்தை என் மனைவியும் நானுமாக அக்குவேறு ஆணிவேறாக அலசித் தீர்த்தோம். அதில் ஜமைக்காவைச் சேர்ந்த ஆஸ்ரிடா:.பர்மன் என்பவர், தொடர்ந்து ஐம்பது மணி பதினேழு நிமிடங்களுக்குக் கைதட்டிச் சாதனை புரிந்துள்ளதாகக் குறிப்பிட்டிருந்தது. எனக்கு ஆச்சரியமாக இருந்தது. கைதட்டுதல் கூட ஒரு சாதனையா? அதுவும்கின்னஸில்இடம்பெறும்அளவுக்கு! அப்படியானால் அந்தச் சாதனையை நான் முறியடித்தே ஆக வேண்டும் என்று என்னுள் ஒரு தீவிரம் வளர ஆரம்பித்துவிட்டது. என் மனைவியிடம் என் எண்ணத்தைச் சொன்ன போது, அவள், 'கைதட்டி என்னத்தைக் கிழித்துவிடப் போகிறீர்கள்?' என்று கேலி செய்தாள். மனைவி கூடக் கிண்டல் செய்கிறாளே என்று சில நாட்கள் யோசித்தேன். ஆனாலும் என்னுள் இருந்த தீவிரம் குறையும் வழியாக இல்லை. எனவே கின்னஸ் புத்தகத்திலிருந்த முகவரிக்கு (மிடில்செக்ஸ் இங்கிலாந்து) எழுதிக் கின்னஸ் சாதனையில் இடம்பெறுவதற்கான விதிமுறைகள் பற்றிய முழு விவரங்களையும் கேட்டேன். நான் எழுதிய சில நாட்களிலேயே அவர்களிடமிருந்து நிபந்தனைகள் பற்றிய பட்டியல் வந்துசேர்ந்துவிட்டது. என் ஆர்வமும்விசுவரூபம் எடுத்துவிட்டது. ஆனாலும் மனைவியிடம் அதைத் தெரிவிக்கத் தயங்கினேன்.

"அந்தச் சமயம் பார்த்து என் மனைவிக்குச் சிறிது உடம்பு சரியில்லாமல் போகவே அதைச் சாக்காக வைத்து அவளையும் என் இரண்டு வயது மகனையும் கொண்டுபோய்த் தூத்துக்குடியில் உள்ள அவள் பெற்றோர் வீட்டில் விட்டுவிட்டேன்.

"பிறகு, கடந்த டிசம்பர் முதல் வாரத்திலிருந்து பயிற்சி செய்ய ஆரம்பித்தேன். மனித நடமாட்டம் குறைவாக உள்ள ஏரிக்கரை, குளக்கரை போன்ற இடங்களுக்குச் சென்று அதிகாலையிலும் மாலையிலுமாகத் தினமும் கைதட்டிக் கொண்டிருப்பேன். 'ஒரு நிமிடத்துக்குக் குறைந்தது 140 முறை கைதட்ட வேண்டும்; தட்டுவது முந்நூறு அடி தூரத்துக்குக் கேட்க வேண்டும்' என்பதுகின்னஸ்காரர்களின் நிபந்தனைகளுள் ஒன்று. அதன்படியே பயிற்சி செய்யத் தொடங்கினேன்." நான் இருக்கும் வேப்பூர் சின்ன ஊர் என்பதால் நான் இப்படிக் கைதட்டிக் கொண்டிருப்பது பலருக்கும் தெரிந்துபோய் அனைவரும் என்னை விநோதமாகப் பார்க்க ஆரம்பித்தனர். இருந்தாலும் நான் ஒரு பொறுப்புள்ள வங்கி அலுவலர் என்பதால் அவர்களால் வெளிப்படையாக ஒன்றும் சொல்ல முடியவில்லை. அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல் டிசம்பர் நான்காம்தேதிமுதல்வங்கிக்கு'லீவ்' போட்டுவிட்டுப் பயிற்சியை மேலும் தீவிரமாக்கினேன். ஓர் இரவு வேப்பூரிலிருந்து அரியலூர் வரை கைதட்டிக் கொண்டே நடந்து சென்று கூடப் பயிற்சி செய்து பழகினேன்!

"கின்னஸின் மற்றொரு நிபந்தனைப்படி சர்வதேச அங்கீகாரம் பெற்ற பெரம்பலூர் ரோட்டரி மற்றும் ரோட்டராக்ட் கிளப்பினருடைய மேற்பார்வையில் டிசம்பர் 13 ஆம் தேதி காலை ஏழு மணிக்குக் கைதட்ட ஆரம்பித்து என் சாதனையைத் துவங்கினேன். பெரம்பலூர் பாரத்பெட்ரோல் பங்கில் இந்த நிகழ்ச்சி நடந்த போது, அருகிலிருந்த உள்ளூர் பிரமுகர்களும் ரோட்டரி மற்றும் ரோட்டராக்ட் கிளப்பைச் சேர்ந்தவர்களும் உடன் இருந்து, எனக்கு அவ்வப்போது குளுக்கோஸ், தேன் முதலியவற்றை ஊட்டிவிட்டனர். 13 ஆம் தேதி இரவு பன்னிரண்டு வரை நிறுத்தாமல் கைதட்டினேன். அதற்குப் பிறகுதான் முதல் முறையாக ஐந்து நிமிடம் ஓய்வு எடுத்துக் கொண்டேன். (கின்னஸ் விதிகள் ஒரு மணி நேரத்துக்கு ஒரு முறை ஐந்து நிமிட ஓய்வு எடுத்துக் கொள்ள அனுமதிக்கின்றன.) அப்போதுதான் இரண்டு கைகளிலும் வலி தெரிய ஆரம்பித்தது. வலி என்றால் அப்படியொரு சொல்ல முடியாத வலி. அப்போது மற்றவர்கள் என் கைகளுக்கு ஏதேதோ மருந்துகள் தடவி, ஒத்தடம்கொடுத்தும், பவுடர் பூசியும் உபசரித்தார்கள். இன்

# என்னத்தைக் கிழித்தீர்கள்?"

## — மனைவி கூட கேலி செய்தாள்!

னஸ் சாதனை ஒன்றே என் மனத்தில் இருந்த தால் நான் அதையெல்லாம் லட்சியம் செய் யாமல் ஓர் அசுரத்தனத்தோடு தொடர்ந்து கைதட்டிக் கொண்டே இருந்தேன்.

''பதினைந்தாம் தேதி காலை 9.17 மணிக்கு ஆஸ்ரிடாஃபர்மனின் சாதனையை நான் முறி யடித்துவிட்டதாகக்கூறி எனக்குமாலைபோட் டார்கள்; பொன்னாடை போர்த்தினார்கள். என்னுடன் நின்றுகொண்டு பல பேர் ஃபோட்டோ எடுத்துக் கொண்டார்கள். காமெரா ஃப்ளாஷ்கள் பளிச்சிட்ட போது, நான் அந்தப் பகுதியில் ஒரு பெரிய மனிதனாகி விட்டேன் என்ற எண்ணம் என் மனத்துள் மின்னலடித்தது.

''அந்தச் சந்தோஷத்தோடு என் மனைவி யைப் பார்க்கச் சென்றபோது, ஏற்கெனவே செய்தித்தாள்கள் மூலம் விஷயத்தை அறிந் திருந்த அவள், பெருமையும், பூரிப்பும் அடைந்திருந்தாள். முன்பு இருந்த கேலியும், கிண்டலும் போன இடம் தெரியவில்லை! மாறாகக் கின்னஸ் சாதனையை முறியடித்த வனின் மனைவி என்ற பெருமிதம் அவள் முகத்தில் தெரிந்தது. என் மகன் கூட என்னைப் பற்றிய செய்தி பேப்பரில் வந்துள் ளதை அவள் படிக்கக் கேட்டுக் கைதட்டின னும். அவளே சொல்லிச் சொல்லிப் பெரு மைப்பட்டாள்.

''என்னுடைய இந்தச் சாதனை எப்படிச் சில நாள் பயிற்சியிலேயே சாத்தியமாயிற்று என்று பலரும் ஆச்சரியப்படுகிறார்கள். இதில் ஆச்சரியப்படுவதற்குஎதுவுமேஇல்லை. நான் பிறந்து வளர்ந்ததெல்லாம் திண்டுக்கல் அருகிலுள்ள பம்மல் நாயக்கன்பட்டி என்ற ஒரு குக்கிராமம். கம்பஞ்சோறும், மோரும், கடும் உடல் உழைப்புமாகத்தான் என் பள்ளி வாழ்க்கையே தொடங்கியது. பிறகு திண்டுக் கல்லிலுள்ள கல்லூரிக்குச் சென்று பி. யூ. சி. படித்தபோதுகூட தினமும் எங்கள் கிராமத் திலிருந்து நடந்து சென்றுதான் படித்தேன். குடும்பச் சூழ்நிலை அப்படி! அதையெல்லாம் ஒப்பிடும்போது இந்தச் சாதனை ஒன்றும் பிர மாதமல்ல.

''இப்பொழுது எனக்கிருக்கும் மனநிலை யில், சரியான ஊக்கமும், வழிகாட்டுதலும் இருந்தால், நான் எவரெஸ்டில் ஏறுவதற்குக் கூடத்தயார்! ஆனால் அதற்கெல்லாம் ஊக்கம் கிடைக்கிறதோ இல்லையோ அடுத்தாற்போல் நான் கையில் முட்டையையோ அல்லது பால் டம்ளரையோ வைத்துக் கொண்டு நடந்து எனது அடுத்த சாதனையை நிகழ்த்தலா மென்றிருக்கிறேன்! ஆனால் சிலர் என்னைப் பார்த்து, 'இதெல்லாம் வெட்டி வேலையில் லையா?' என்கிறார்கள். ஏன் சார்! உலகத்தின் சாதனைப் புத்தகத்தில் ஓர் இந்தியனின் பெயர் — அதுவும் ஒரு கிராமத்தானின் பெயர் இடம் பெறுவது உண்மையில் சந் தோஷப்படும் விஷயம் இல்லையா?'' என்று பெருமைபொங்கக் கேட்கிறார் முப்பது வயது இளைஞரான ஜெயராமன்.

— எஸ். சந்திரமௌலி.

புகைப்படம்: மனோ.



# ஸ்ரீ நாராயண தீர்த்தர்

**ஸ்ரீ நாராயண தீர்த்தர் பக்த கோடிகளுக்கு ஒரு விக்ஞாபனம்:**

இப்பவும் ஆராதனை விழா 15.02.86 முதல் 17.02.86 முடிய திருப்பூந்துருத்தியில் அதி விமரிசையாகக் கொண்டாட இருப்பதால் நன்கொடை அளிப்பவர்கள் கீழ்க்கண்ட பொக்கிஷதாரர் விலாசத்திற்குத் தாராளமாகக் கொடுத்து உதவும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

திருப்பூந்துருத்தி V. வெங்கடேசன்.

(காரியதரிசி),

திரு. L. பாலசுப்ரமணியன், B. Sc. B. A. B. T.,

பொக்கிஷதார்,

1090, பாப்பன்னு சந்து,

தஞ்சாவூர், 613 009.

# இப்போதும் சொல்கிறேன்

**என் கல்பனாவை**

**என்னிடம்**

**சேர்ப்பதாக இருந்தால்**

**கீழே இறங்கி வருகிறேன்;**

**இல்லையென்றால்**

**தற்கொலைதான்........**



**கை**யிலெடுத்தரிசீவர்காதுக்குள்என்ன சொன்னதோ தெரியவில்லை.....

அதிர்ந்து போய் நின்றாள் அம்மா.

''என்னங்க, கொஞ்சம் இப்படி வாங்களேன்!'' அவசரமாக அவள் அழைக்க,

கைலாசம் வாசல்வரை போய்த் திரும்பாமல் நின்றார்.

''ஏதாயிருந்தாலும் அங்கிருந்தேசொல்லு! ஆயிரம் வேலை இருக்கு எனக்கு!''

''ஃபோன்ல போலீஸ்!''

நாலே எட்டில் டெலிபோனை அடைந்து ரிசீவரை அவளிடமிருந்து பறித்து, ''யெஸ் கைலாசம் ஸ்பீக்கிங்!'' என்றார்.

எதிர் முனை முனக, முனக,

இவர் முகம் மாறிக் கொண்டே வந்து, முத்தாக வியர்த்து, ரிசீவரைப் பிடித்த கை மெலிதாக வியர்த்து, கால்கள் சின்னதாக நடுங்கி,

''ஓ.கே. ஓ.கே. நான் அங்க வர்றேன்... அதுவரைக்கும் எதுவும் நடக்காம கவனிச்சுக்குங்க....

முடித்ததும்.....

சோபாவில் தொப்பென்று சரிந்தார்.

பார்வையைக் கேள்வியாக்கி, எதிரே வந்து நின்றாள் லக்ஷ்மி.

''கல்பனா எங்கே?''

''டெலிபோன்ல என்.....?''

''நான் கேட்டதுக்கு நீ பதில் சொல்லு. கல்பனா எங்கே?''

''வழக்கம் போல அவ ரூம்ல.....'' முடிக்காமல் பயத்தோடு நிறுத்த.....

''என்னது வழக்கம் போல?''

''அழுதுகிட்டு இருக்கா....!''

''இடியட், இவ இங்கே அழறா.... அந்தப் பய நம்மளை ஒரேயடியா அழ வெச்சுடுவான் போல இருக்கு....''

''யாரைச் சொல்றீங்க?''

''அதான், அந்தப் பொறுக்கி, அயோக்கியன், இடியட் தினேஷ்.....

'தினேஷ்' என்றதும் அம்மா குழப்பத்துடன் விழிக்க,

அந்தப் பெயர் காதில் விழுந்ததுமே, அறை வாசலுக்கு அவசரமாகக் கல்பனா ஓடி வர,

கைலாசம் பற்களை இனேஷாக நினைத்துக் கடித்தார்.

இதோ.....

அந்த தினேஷ்!

'' வீட்ல சொன்னியா கல்பனா?''

''நான்தான் உங்கிட்ட சொன்னேனில்ல அது சாத்தியமே இல்லேப்பா. லவ் மாரேஜை எங்கப்பா ஒப்புக்க மாட்டார்.''

''சரி வேறென்ன வழி?''

''தெரியலே.''

''ஓடிப் போயிடலாமா?''

''அய்யோ, எனக்குப் பயம்மா இருக்குப்பா. நான் வர மாட்டேன்!''

''சரி ஆளை விடு. நான் போறேன்!''

''என்ன தினேஷ் இது? கோவிச்சுக்கிட்டுப் போனா என்ன அர்த்தம்?''

''எதுக்கும் நீ ஒப்புக்கலேன்னா என்ன செய்ய முடியும்?''.

''நீயே சொல்லு!''

''உங்கப்பாவை நான் வந்து பார்த்துப் பேசறேன். இதுக்காவது சம்மதிக்கிறியா?''

''ரிஸ்க்தான். உனக்குச் சமாளிக்கத் தைரியம் இருந்தா எனக்கு ஆட்சேபணை இல்லேப்பா!''

''ஓ. கே. டன்! சாயங்காலம் வர்றேன்.''

சாயங்காலம் வந்தது.

உள்ளே நுழையும்போது கொஞ்சம் உதறத்தான் செய்தது. தைரியத்தைப் பற்களில் சேமித்து எக்குத் தப்பாக நாக்கைக் கடித்துக் கொண்டு, கஷ்டப்பட்டு, இங்கே கைலாசம் ஜு என்று சொல்ல நினைத்து, 'கை' வரை தான் வார்த்தை வந்தது.

ஒரு வழியாக அவரைப் பார்த்து 'விஷ்' செய்து, ''யெஸ் ஜெண்டில்மேன், யார் நீங்க? என்ன விஷயமா என்னைப் பார்க்க வந்தீங்க?'' என்றவரிடம்,

சுய அறிமுகத்தை உளறிக் கொட்டி, வியர்த்து, வழிந்து, கல்பனாவைக் காதலிப்பது வரை எட்டாம் வாய்ப்பாடு சொல்வது

**தேவிபாலா**

போலக் கண்ணை மூடிக் கொண்டு சொல்லி முடித்துத் திறந்தவுடன் எதிரே டீ இருந்தது.

''ரிலாக்ஸ்! டீ சாப்பிடுங்க.''

தெம்பாகச் சிரித்துவிட்டு, 'டீ'யைக் கையில் எடுத்தான்.

'ஒப்புக்குவாரா? டீயெல்லாம் தடபுடலா இருக்கே. கல்பனாவைக் காணுமே!'

முடித்துவிட்டு நிமிர்ந்தான்.

மெல்லச் சிரித்த அவர், ''இது மாதிரி விஷயங்கள்ளே எனக்கு நம்பிக்கையில்லே, மை டியர் தினேஷ். எம் பொண்ணுக்கு நான் மாப்பிள்ளே பார்த்தாச்சு. உங்களுக்கும் இன்விடேஷன் வரும். வேறென்ன?'' என்றார்.

இனிபேசித்தான் ஆகவேண்டும். நிலைமை கரை கடந்துவிட்டது.

''என்னைக் கொஞ்சம் பேச விடுவீங்களா ஸார்?''

''யெஸ் கோ அஹெட்!''

''நான் உங்க ஜாதிதான். சப் காஸ்ட், கோத்திரம், லொட்டு லொசுக்கு..... எல்லாமே கல்பனாகூட எனக்குப் பொருந்தியிருக்கு ஸார். ஃபார் யுவர் இன்ஃபர்மேஷன், ஜாதகம் கூடப் பார்த்தாச்சு.''

''ம். மேலே.''

''வயசும் பொருத்தமா இருக்கு.''

''அப்புறம்?''

''நான் நல்லாப் படிச்சு, கை நிறையச் சம்பாதிக்கிறேன்.''

''தென்?''

''உயிருக்குயிரா கல்பனாவைக் காதலிக்கறேன். ஸோ, என்னை நீங்க மறுக்க எந்தக் காரணமும் உங்களாலே சொல்ல முடியாது.''

''மை டியர் பாய், நான் பார்த்துப் பண்ணி வெச்ச நாலு 'லவ் மாரேஜு'ம் அட்டர் ஃபெயிலியர். இன்னும் சொன்னா சமீபத்திய ஒரு ஜோடி தற்கொலை பண்ணிக்கிட்டாங்க, தெரியுமா? காரணம் உனக்கு வேணும்.... நான் இதை வெறுக்கறேன். என் பொண்ணுக்கு இப்படி ஒரு விபத்து நேர நான் விடமாட்டேன்.''

''வெற்றி அடைஞ்ச காதல் கல்யாணங்களைப் பத்தி நான் சொல்....''

''நத்திங் டூயிங்! நான் எடுத்த முடிவை மாத்திக்கத் தயாரா இல்லே. உனக்குக் கல்பனா கண்டிப்பா கிடைக்கமாட்டா. நீ போகலாம்.''

ஒரு முறையல்ல....

பலமுறை கெஞ்சிப் பார்த்து, மன்றாடி நின்று, தோற்றுத் துவண்டு, அங்கு வராமலே போய்விட்டான் தினேஷ்.

கல்பனாவும்....

சளைக்காமல் கைலாசத்தைச் சரிக்கட்டச் சகல வழிகளையும் கையாண்டு முடியாமல், தினமும் அறைக்குள் அழுது கொண்டிருக்கிறாள்....

இன்னும் ஒரு வாரத்தில் கல்யாணம். ஓடிவிடலாமா என்று கூடத் தோன்றிவிட்டது. தினேஷைப் பார்க்கக் கூட முடியவில்லை. அப்பாவைக் கொல்லத் தோன்றியது!

அம்மாவும், அப்பாவிடம் - கேட்டுப் பார்த்து, வாங்கிக் கட்டிக் கொண்டதுதான் மிச்சம்....

பத்திரிகை கூட அடித்தாகிவிட்டது.

அத்தனை ஏற்பாடுகளும் துரித வேகத்தில் நடந்து கொண்டிருக்க,

சமையல்காரருக்குச் சொல்லப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறார் கைலாசம்.

இந்த நேரத்தில்தான் டெலிபோன். டெலிபோனில் போலீஸ். செய்தி தினேஷைப் பற்றி....

''என்னாச்சுங்க? விவரமாச் சொல்லுங்க!'' அம்மா பதற,

''நேரு ஸ்டேடியத்துல நாலு பக்கமும் பெரிய டவர் இருக்கில்லே? அதுல ஒண்ணுல, சுமார் அறுபதடி உயரத்துல ஏறி நிக்கறானும் இந்த தினேஷ். இவன் அதுல ஏறறதுக்கு முன்னால போலீஸுக்கு ஒரு லெட்டர் எழுதி வெச்சுட்டு ஏறியிருக்கானும்....''

''என்னன்னு எழுதியிருக்கானும் லெட்டர்லே?''

''நேர்ல போய்ப் பார்க்கணும். நம்ம சம்பந்தப்பட்ட லெட்டர்தான். போலீஸ்லே கோவமாகச் சொல்றாங்க. அவங்களிடம் டவரிலிருந்து குதிச்சுடுவேன்னு மிரட்டறானும். 'நான் சாகாம இருக்கணும்னா கீழே இருக்கிற அட்ரஸ்ல இருக்கும் கைலாசத்தைக் கூட்டிகிட்டு வாங்க'ன்னு எழுதியிருக்கானும்!''

''எனக்குப் புரியலீங்க!''

''மரமண்டை! பிளாக் மெயில் பண்றான். செத்துத் தொலைஞ்சாத் தொல்லே. நான் போய் என்னாச்சுன்னு பார்க்கறேன்!''

கல்பனா பாய்ந்து கொண்டு வந்தாள்.

''தினேஷுக்கு என்னப்பா. நானும் வர்றேம்பா....!''





"இந்தச் சனியனாலே வந்த வினைதான் இத்தனையும். வந்து தொலை!"

கைலாசம் பதறிப் போய், ஆட்டோ பிடித்து, கல்பனாவும் அவருடன் ஏறிக் கொள்ள, நேரு ஸ்டேடியம் வரும்வரை இருப்புக் கொள்ளவில்லை அவருக்கு.

டவரை நெருங்க, நெருங்க, ஒரே கூட்டமாக இருந்தது. நிமிர்ந்து பார்த்தபோது....

அறுபதடி உயரத்தில் இரும்பு கட்டுமானங்களுக்கு நடுவில் சாய்ந்தவாக்கில் நின்று கொண்டிருந்தான் தினேஷ். தெளிவாக இல்லாமல், சின்னதாகத் தெரிந்தான்.

'விழுந்தால் கபால மோட்சம்தான்....'

'பீஸ் பீஸாயிடுவான்.''

ஆளுக்கு ஆள் ஒவ்வொன்று பேச வயிறு கலங்கிப் போனது கைலாசத்துக்கு.

அவசரமாகப் போலீஸை நெருங்கி, "நான் தான் கைலாசம்" என்று இழுத்தார்.

"கல்பனா யாரு?"

அவள் முன்னால் வர, போலீஸ் கைலாசத்தை ஒரு மாதிரியாகப் பார்க்க, நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகத் தோன்றியது கைலாசத்துக்கு.

"இந்தாங்க லெட்டர்.....!"

அவசரமாகப் பார்த்தார்.

'டியர் போலீஸ் கமிஷனர்! கல்பனாவுடன் கொண்ட என் காதல் மறுக்கப்பட்டதால், டவரில் ஏறித் தற்கொலை செய்து கொள்ள முடிவு செய்துவிட்டேன். கைலாசத்திடம் மன்றாடிப் பார்த்துத் தோற்றுவிட்டேன். என் காதலை அவர் நிராகரிக்க எந்தக் காரணமும் இல்லை. இந்தப் பிடிவாதத் தகப்பனுக்கு ஒரு பாடம் கற்பிக்கவே இந்த முடிவுக்கு வந்தேன். இள நெஞ்சங்களை முறித்துப் போடும் தகப்பன்களுக்கு இது ஒரு சவாலாக இருக்கட்டும். இப்போதும் சொல்கிறேன், என் கல்பனாவை என்னிடம் சேர்ப்பதாக இருந்தால், கீழே இறங்கி வருகிறேன் இல்லையென்றால் தற்கொலைதான்

## சீதை காட்டுக்குச் சென்றதேன்?



நான் மதுரைப் பல்கலைக் கழகத்தில் அஞ்சல் வழியில் படிக்கும் மாணவர்களுக்காகக் கம்பராமாயணம் நடத்தும்போது வனத்துக்குச் சென்ற சீதாப்பிராட்டியின் பெருமையைப் பற்றிச் சொன்னேன். அப்பொழுது துடுக்கான பெண் ஒருத்தி எழுந்து, 'கணவன் மீது உள்ள அன்பால் சீதை வனம் சென்றாள் என்பதைவிட மூன்று மாமியார்களிடம் வாழ்வதைவிடக் காடே பரவாயில்லை என்று நினைத்துத்தான் சென்றாள் என்பதே சரி' என்றாள். அதற்கு நான், 'நீங்கள் இவ்வாறு சொன்னால், மாமியார் நிலையில் உள்ள பெண்மணிகள் இராமன் தனியாகக் காட்டிற்குச் சென்றால், நிம்மதியாக இருந்துவிடப் போகிறான் என நினைத்துத் துன்பம் தருவதற்காகத் தான் தொடர்ந்து சென்றாள் சீதை' எனக் கூறிவிடுவார்கள் எனக் கூறியவுடன் துடுக்குப் பெண் உள்பட அனைவரும் சிரித்துவிட்டனர்.

— கா. சுப்பிரமணியன்.

---

என்னைக் காப்பாற்றும் முயற்சியில் யாராவது மேலே ஏற முயற்சி செய்தால் கண்டிப்பாகக் குதித்து விடுவேன்... மரணமா, மரணமா என்பது கைலாசத்தின் கையில் — தினேஷ்.'

'பிடிவாதத் தகப்பனுக்குப் பாடம் கற்பிக்க...'

பற்களைக் கடித்தார் கைலாசம். 'ஒனக்கு அவ்ளோ கொழுப்பா?'

''என்ன மிஸ்டர் கைலாசம்? விநாடிகள் நகர்ந்துட்டே இருக்கு. ஓர் உயிர் உங்க கையில தான் இருக்கு. தனி மனிதனை உங்களோட பிடிவாதத்தால ஓர் உயிர் சேதப்படணுமா? அது மட்டுமல்ல, தேவையில்லாத கூட்டம்; டிராபிக் ஜாம்; அனாவசியமாப் பத்திரிகைக்காரங்களுக்கு நியூஸ்... இதெல்லாம் அவமானமில்லையா? சீக்கிரம் யோசியுங்க. தாமதிக்கிற நிமிஷங்கள் ஆபத்துல முடிஞ்சா, டிபார்ட்மெண்ட்டுக்கு நாங்களும், நீங்களும் பதில் சொல்லணும்.''

''கொஞ்சம் பேசணும் இன்ஸ்பெக்டர், நான் சொல்றபடி செய்யுங்க. மைக்கை இப்படிக் கொடுங்க!''

கொடுத்தார்.

''தினேஷ்! நான்தான் கைலாசம்! அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் வராதே! என் பதில் உனக்குச் சாதகமாகவே இருக்கும். அங்கேயே இரு!' எனக்குப் பத்து நிமிஷம் அவகாசம் தா...

''ப்ளீஸ் இன்ஸ்பெக்டர், இப்படிக் கொஞ்சம் வாங்க!'

''சொல்லுங்க!''

''இந்த அயோக்கியன் சமூகத்துக்கு ஒரு வழிகாட்டி. நான் நினைச்சது நடக்கலைன்னு, ஒவ்வொரு பயலும் உச்சில ஏறி நின்னுருவான். உயிருக்குப் பயந்து எத்தனை விஷயங்களுக்குத் தலையாட்ட முடியும்? ஒரு கைலாசம் மட்டும் இதுல பாதிக்கப் படலை. தனி மனுஷன்தான் நாளைக்கு ஒரு சமூகமா மாறும். கோரிக்கைகளை நிறைவேத்திக்க ஒரு குறுக்கு வழி. இதை ஆதரிக்கறது நமக்கு நாமே குழி தோண்டறதுக்குச் சமம். ஸோ, நீங்களும் மைக்ல ஒப்புக்குங்க.. அந்த இடியட் எறங்கி வந்ததும் அரெஸ்ட் பண்ணிருங்க...''

''பொது எடத்துல இப்படிச் செஞ்சா நாங்க அதைத்தான் செய்வோம்.''

''தாராளமா உள்ள தள்ளுங்க. நானும் நாலு கேள்வி கேட்டுட்டுப் போறேன். கைலாசமா, கொக்கா, என்னன்னு நினைச்சான் இவன் என்னைப் பத்தி?''

மைக்கை எடுத்த கைலாசம்,

''தினேஷ் கீழே இறங்கி வா. நீ இஷ்டப் பட்டபடியே செய்யறேன்...''

''யெஸ் தினேஷ்! ஐ கிவ் எ காரன்டி... ப்ளீஸ் கம் டௌன்!'' இன்ஸ்பெக்டர் தொடர, அவனிடம் எந்தச் சலனமும் இல்லை. நின்ற இடத்திலேயே இருந்தான்.

ஒரு முறைக்கு மூன்று முறை சொல்லியும் எந்த அசைவும் வராமல் போகவே, கைலாசம் உதற ஆரம்பித்து விட்டார்.

இன்ஸ்பெக்டர் பரபரப்பாகி, ''ஸம்திங் ஸினிஸ்டர்! மயக்கமாயிட்டானா? சாஞ்சு நின்னுட்டு இருக்கான். விழுந்து, கிழுந்து தொலைச்சாக் காரியமே கெட்டுரும்.'

''மாணிக்கம்! ஃபயர் என்ஜின் வரட்டும். க்ரேன் போட்டு ஏறி ஆளைக் கீழே கொண்டு வந்துடுங்க.''

ஃபயர் என்ஜின் உடனே வந்தது.

மறுபடியும் மைக் மூலம் ''தினேஷ், அப்படியே இரு. ஆள் மேலே வருது. நீ சொன்னபடியே எல்லாம் நடக்கும்! அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் வந்துடாதே!''

க்ரேன் ஆளை வாங்கிக் கொண்டு உயர— குறிப்பிட்ட அந்த இடத்தைச் சமீபித்து... கிராதியில் கால் வைத்துத் தினேஷை நெருங்கிய அந்த ஆள் அப்பட்டமாக அதிர்ந்தான்.

சற்று நேரத்தில் அவன் கீழே வந்தபோது...

பார்த்த இன்ஸ்பெக்டருக்கு முகம் பேயடித்துப் போனது.

அது ஓர் அழகான ஃபைபர் கிளாஸில் செய்யப்பட்ட பொம்மை. திருத்தமாக உடுப்புப் போடப்பட்டு ஆளைப் போல இருந்த பொம்மை. அதன் கைப்பகுதியில் சின்னக் காகிதத்துண்டு. 'மன்னிக்க வேண்டுகிறோம்' — தினேஷ் அண்ட் கல்பனா.

சட்டென ஏதோ தோன்ற, கைலாசம் கல்பனாவின் நினைவு வந்து அவளைப் பார்த்தார்.

அவள் எப்படி இங்கே இருப்பாள்...?

இவர்களுக்குக் கடுக்காய்க் கொடுத்துவிட்டு, வடபழனி முருகன் சன்னிதானத்தில் தினேஷோடு மாலையும் கழுத்துமாகவல்லவா நின்று கொண்டிருக்கிறாள் அவள்!

யாமினி கண்ணாடிக் கதவைத் தள்ளிக் கொண்டு தயக்கமாய் உள்ளே நுழைந்தாள். வெளியே மழை பெய்து கொண்டிருந்தாலும், அறையில் பரவி யிருந்த ஏ.ஸி.யின் ஜில்லிப்பு, அவளுடைய புறங் கழுத்தில் ஐஸ் கட்டி மாதிரி ஒற்றி யெடுத்தது.

சதுர மேஜைக்குப் பின்னால் உட்கார்ந்திருந்த பிரபு யாமினியைப் பார்த்து மெல்ல சிரித்தார். "குட் ஈவினிங் மிஸ் யாமினி.... உங்களை ரொம்ப நேரம் உட்கார வெச்சுட்டோம். ஸாரி பார் த இன்கன்வீனியன்ஸ்."

"பரவாயில்ல ஸார். ஆல்பபடிக் வரிசைப்படி நீங்க என்னைக் கடைசியா கூப்பிட்டிருக்கீங்க."

"உட்காருங்க மிஸ் யாமினி. யூ ஸீம் டு பி டயர்ட். காப்பி கொண்டு வரச் சொல்லட்டுமா?"

"நோ.... தேங்க்ஸ்."

சொல்லிக் கொண்டே நாற்காலியின் நுனியில்பட்டும்படாமலும்உட்கார்ந்தாள் யாமினி. பிரபு தன் முழங் கைகளை மேஜையின் மேல் ஊன்றிக் கொண்டு, யாமினியை உன்னிப்பாய்ப் பார்த்தபடி கேட்டார்.

"உங்க முழுப் பேரே யாமினிதானா?"

"ஆமா."

"பேர் அழகா இருக்கிற மாதிரியே நீங்களும் அழகா இருக்கீங்க."

"தேங்க்ஸ்."



"இந்த வேலையை உங்களுக்குக்கொடுத்தா...நீங்க தினமும் அமிஞ்சிக்கரையிலிருந்து இந்தப் பல்லாவரத்துக்கு சரியான நேரத்துக்கு வந்துடுவீங்களா?"

"வந்துடுவேன்."

"இங்க ஆபீஸ் ஆரம்பிக்கிற நேரம் எட்டரை மணி."

"எட்டு மணிக்கு ஐ'ல், பி ஹியர் ஸார்."

பிரபு சிரித்தார். "இந்த ஆபீஸ் மத்த மெட்ராஸ் ஆபீஸ் மாதிரியில்லே மிஸ் யாமினி. இங்கே வேலை பார்க்கிற ஒவ்வொருத்தரும் மனத்திலே பயத்தையும் உடம்புல சுறுசுறுப்பையும் சுமந்துகிட்டு வேலை பார்ப்பாங்க. அதுவும் உங்க வேலைக்கு நிறைய ஹைஜீன் வேணும். ப்ளீஸ் கொஞ்சம் திரும்பி, உங்களுக்குப் பின்னாடி இருக்கிற அந்த சார்ட்டைப் பாருங்க."

யாமினி திரும்பிப் பார்த்தாள்.

கறுப்பு நிறப் பின்னணியில், ஒரு பிளாஸ்டிக் போர்டு தெரிய, அதில் வெண்ணிற ஆங்கில எழுத்துக்கள் பதிந்து சின்ன சின்ன வாக்கியங்களாய் ஓடியிருந்தது. பார்வையால் அவைகளை மேய்ந்தாள் யாமினி.

**A for apple in Nursery Class but here**
**A for Administration**
**B for Boldness**
**C for Character**
**D for Discipline**
**E for Energetic....** யாமினி வேகமாய் மனத்துக்குள் படித்துக் கொண்டே போனாள். **F for Faith G for Gratitude H for Health.......**

மளமளவென்று படித்துக் கொண்டே வந்தாள்.

சட்டென்று பார்வையை நிறுத்தினாள்.

**M for....** அந்த இடம் எழுத்துக்கள், உதிர்ந்து போய் வெறுமையாய் இருந்தது. யாமினி பிரபுவைத் திரும்பிப் பார்த்தாள். அவர் புன்னகை புரிந்தார்.

"நேத்தைக்குத்தான் அந்த லெட்டர்ஸ் உதிர்ந்து போயிருக்கு.... லெட்டர் டைப்ஸ் வாங்க ஆள் போயிருக்கு. வந்ததுமே ஃபிக்ஸ் பண்ணிடுவாங்க. எம். ஃபார் என்னான்னு நீங்க சொல்ல முடியுமா மிஸ் யாமினி?"

யாமினி யோசித்தாள். பிறகு சொன்னாள்.

**"Mercy."**

பிரபு சிரித்தார். "நோ யூ ஆர் ராங் மிஸ் யாமினி. அந்த இடத்துல இருந்த வார்த்தை **'Merit.'**"

"ஸாரி ஸார்."

"ஸோ வாட். எந்த பெண்கிட்டேயும் எம் ஃபார் என்னான்னு கேட்டா மெர்ஸின்னுதான் சொல்லுவாங்க" என்று சொல்லிக் கொண்டே யாமினி அனுப்பியிருந்த அப்ளிகேஷன் பாரத்தையும், அதனோடு இணைக்கப்பட்டிருந்த சர்ட்டிபிகேட்களின் போட்டோ ஸ்டேட் காப்பிகளையும் புரட்ட ஆரம்பித்தார் பிரபு.

ஒரு இரண்டு நிமிஷம் புரட்டலுக்குப் பின் நிமிர்ந்தார். "இன்னைக்கு இந்த இண்டர்வியூவில நீங்க கடைசி காண்டிடேட்டா இருந்தாலும், மத்தவங்களைக் காட்டிலும், எல்லாத்திலேயுமே முதலாவதா, இருக்கீங்க, யூ ஆர் செலக்டட் மிஸ் யாமினி. பட் இன்னும் ஒண்ணே ஒண்ணுல மட்டும் நீங்க தேறணும்."

பரவசமானாள் யாமினி. "சொல்லுங்க ஸார்."

"மெடிக்கல் டெஸ்ட்லே பாஸ் பண்ணணும். இதே ஆபீஸ்ல மெடிக்கல் செல் ஒண்ணு இருக்கு. லேடி டாக்டர் ஒருத்தர் இருக்கார். அவர் உங்களை செக் பண்ணி

## இப்படியே போனால்... அப்படியும் நடக்கும்!

''வன விலங்கு வாரம்'', ''மரியாதை வாரம்'' என்றெல்லாம் அவ்வப்போது அரசு கொண்டாடி வருவது அனைவரும் அறிந்தது. இப்போது வடக்கே ''பாஸ் புத்தகம் பதிவு வாரம்'' கொண்டாடுகிறது, அரசுடைமையான ஒரு பிரபல வங்கி! அதாவது பூர்த்தி செய்யாமல் விட்டுப் போன பாஸ் புத்தகங்களை டெபாஸிட்தாரர்களுக்கு அந்த வாரத்தில் பூர்த்தி செய்து தருவார்களாம்! இப்படியே போனால் டோக்கன் வாரத்தில் டோக்கன் கொடுத்து பட்டுவாடா வாரத்தில் பணம் கொடுப்பார்களோ! நடந்தாலும் நடக்கும் இந்த நாட்டில்!

—சசுவர் குமார்

ரிப்போர்ட தருவார். அந்த ரிப்போர்ட்தான் எங்களுக்கு முக்கியம். இது குழந்தைகள் உணவு தயாரிக்கிற கம்பெனி. இங்க இருக்கிற ஸ்டாஃப் ஹைஜீனிக்கா இருந்தால்தான் ப்ராடக்ட்டும் சுத்தமா இருக்கும்.''

''மெடிகல் ஸெல் எங்கே இருக்கு ஸார்?''

யாமினி ஆர்வமாய் எழுந்தாள்.

மேஜையின் மேலிருந்த காலிங் பெல்லைத் தட்டினார் பிரபு. வெளியே காத்திருந்த சந்திர போஸ் எட்டிப் பார்த்தான்.

''எஸ் ஸார்.''

''மிஸ் யாமினிக்கு மெடிக்கல் செல்லைக் காட்டுங்க. டாக்டரோட மெடிக்கல் ரிப் போர்ட் கம்பெனிக்கு பேவரபிளா இருந்தா, ஸ்டெனோ கிதாகிட்டே சொல்லி அப் பாயிண்ட்மெண்ட் ஆர்டரை டைப் பண்ண ஏற்பாடு பண்ணுங்க.''

''எஸ் ஸார். வாங்க மிஸ் யாமினி'' சந்திர போஸ் பவ்யமாய் கை காட்டி, அவளைக் கண்ணாடி கதவுக்கு வெளியே அழைத்துப் போனான்.

வெளிச்சம் மங்கிக் கொண்டிருந்த அந்தச் சாயந்தர நேர வானம், இருட்டாய்த் தெரிய, மழை இன்னும் பெண்கள் அரட்டையடிக்கிற மாதிரி சலசலவென்று பெய்து கொண்டிருந்தது.

''வாங்க மிஸ் யாமினி. இந்தப் பக்கம் வாங்க. அதோ, அந்த செல்தான். உள்ளே டாக்டரம்மா இருப்பாங்க. டெஸ்ட்டை முடிச்சுட்டு வாங்க. ரிப்போர்ட்டைப் பார்த்துவிட்டு இம்மீடியட்டா உங்களுக்கு அப் பாயிண்ட்மெண்ட் ஆர்டர் டைப் பண்றேன். விஷ் யூ ஆல் த பெஸ்ட்.''

''தேங்க்யூ ஸார்.'' — சொல்லிக் கொண்டே கார்ட்போர்ட்டால் ஆன அந்தக் கதவைத் தள்ளிக் கொண்டு, மெடிகல் செல்லுக்குள் நுழைந்தாள் யாமினி.

''குட் ஈவினிங் டாக்டர்.''

புஸ்தகமொன்றைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்த டாக்டர் கமலவேணி நிமிர்ந்தாள். ஒரு ரெடிமேட் புன்னகையை உதட்டில் லிப்ஸ்டிக் மாதிரி தீற்றிக் கொண்டாள்.

''வாம்மா.... நீதான் லாஸ்ட் காண்டிடேட்டா?''

''ஆமா டாக்டர்....'' என்றவள் தலையை உயர்த்தி, மேலே 'கிர்ர்ர்' என்று சத்தமிட்டு ஓடும் அந்தப் பழைய சீலிங் ஃபேனைப் பார்த்தாள்.

''என்னம்மா பார்க்கிறே. இந்த ஒரு மணி நேரமாத்தான் ஃபேன் இப்படிச் சத்தம் போடுது. எலக்ட்ரீஷியனுக்கு சொல்லிவிட்டிருக்கேன். உம் பேரென்னம்மா?''

''யாமினி.''

''வயசு?''

''இருபது.''

''உனக்குத் தெரிஞ்சு எப்பவாவது நீ ஏதாவது ஒரு காரணத்துக்காக ஆஸ்பிடல்ல அட்மிட் ஆயிருக்கியா யாமினி.''

''இல்ல டாக்டர்.''

''அடிக்கடி கோல்ட் அட்டாக் ஆகுமா?''

''ரொம்பவும் அபூர்வம்!''

''ட்ரஸ்ஸை ரிமூவ் பண்ணிட்டு அந்த டேபிள் மேலே ஏறிப் படும்மா.''

ஒரு துணுக்குறலோடு நிமிர்ந்தாள் யாமினி.

''ட்ரஸ்ஸை ரிமூவ் பண்ணணுமா டாக்டர்?''

''எஸ். இந்த மெடிக்கல் டெஸ்ட்டோட நோக்கமே இங்கே வேலை செய்ய வர்றவங்களுக்கு கண்டேஜியஸ் டிஸீஸ் இருக்கான்னு பார்க்கத்தான். ம். ரிமூவ் பண்ணிட்டு ஏறிப் படும்மா. மழை ஜாஸ்தியாறதுக்குள்ளே நான் மெட்ராஸ்ல இருக்கிற என்னோட கிளினிக்குக்குப் போயாகணும்.''

''டாக்டர் எல்லா ட்ரஸ்ஸையும் ரிமூவ் பண்ணணுமா?''

''ஆமாம்மா. அஞ்சே நிமிஷம். அப்படி ஏறி படு. அட, என்ன இப்படி வெட்கப் படறே.... லேடி டாக்டர் முன்னாடி என்ன வெக்கம்.... ம்.... நேரமாச்சு. ரிமூவ் யுவர் ட்ரஸ்.''

யாமினி சுற்றும் முற்றும் பார்த்தாள். கூச்சம் உடம்பு முழுவதும் ஆயிரமாயிரம் பூரான்களாய் மாறி ஊர்ந்தது. குளிக்கும்போது, அவளுடைய அம்மாக்காரி முதுகு தேய்க்க வந்தாலே, முழு உடம்பையும் காட்டாமல் குறுகி உட்கார்ந்து கொள்வாள் யாமினி.

''என்னம்மா யோசனை பண்றே? நீ இப்படித் தயங்கத் தயங்கத்தான் உன்னோட உடம்புக்கு ஏதாவது இருக்குமோன்னு எனக்குச் சந்தேகம் வருது. நான் எம்.டி.க்கு ரிப்போர்ட் அனுப்பட்டுமா, வேண்டாமா?''

''ஸாரி டாக்டர். இதோ....'' சொல்லிக் கொண்டே தான் அணிந்திருந்த தக்காளி நிற போட்டோ பிரிண்டட் சேலையைக் களைய ஆரம்பித்தாள்.

''இப்படி ஓரமா வந்து நின்னு ஒவ்வொண்ணா கழற்றி அந்த ஸ்டூல் மேல வையம்மா. டெஸ்ட் அஞ்சே நிமிஷந்தான். மறுபடியும் உடுத்திக்கிட்டு நீ கிளம்பிட

லாம்'' என்று சொல்லியபடி, கார்ட்போர்டின் மறைவுக்குப் பின்னால் செயல்பட்டுக் கொண்டிருந்த காமிரா நேர் பார்வைக்கு முன்னால் யாமினியைக் கொண்டு வந்து நிறுத்தினாள் டாக்டர் கமலவேணி.

தான் காமிராவுக்குள் அங்குலம் அங்குலமாய்ச் சுருட்டப்படுகிறோம் என்கிற விபரீதம் தெரியாமல், உடம்பிலிருந்த சகல வஸ்திரங்களையும் உருவிவிட்டு, முழு உடம்போடு நின்றாள் யாமினி.

டாக்டர் கமலவேணி அயர்ந்து போனாள்.

யாமினியின் உடம்பு வளைவுகள் அவளைப் பிரமிப்பில் ஆழ்த்தின. யாமினியையே இமைக்காமல் பார்த்தாள். உடம்பின் இந்தச் செண்பகப் பூ நிறம், சில பெண்களுக்கு மட்டுமே கிடைக்கக் கூடிய அபூர்வம். இந்த..... இந்த.....

''டாக்டர்.''

யாமினி கூப்பிட சுதாரித்துக் கொண்டாள் கமலவேணி.

''ம். ஏறிப் படும்மா. உடம்பை நல்லா வெச்சிருக்கே. இப்படியே மெய்ன்டயின் பண்ணு. உடம்புக்கு என்ன தேய்ச்சுக் குளிக்கிறே?''

''பயித்தம் மாவு.''

''குட்.''

டேபிளின் மேல் ஏறிப் படுத்தாள் யாமினி.

காமிராவுக்கு வழிவிட்டுவிட்டு, யாமினியின் உடம்பு மேல் கையை வைத்தாள் கமலவேணி. பட்டுத் துணியை ஸ்பரிசிக்கிற மாதிரியான உணர்வில் வியந்து போனாள்.

யாமினி கூச்சப்பட்டாள். டாக்டர் கமலவேணியின் கை தன் உடம்பின் மேல் படும்போதெல்லாம் சிலிர்த்துக்

கொண்டாள். பார்வை மேலே சுழன்று கொண்டிருந்த சீலிங் ஃபேனின் மேல் படிந்திருந்தது. ஃபேன் சுழலும் போது ஏற்படும் அந்த 'கிர்ர்ர்' சத்தத்தைக் காது கிரகித்துக் கொண்டிருந்தது.

கமலவேணி அவளைச் சோதித்துக்கொண்டிருந்தாள். கொஞ்சம் ஒருக்களிச்சு படும்மா. மூச்சை இழுத்து விடு.

யாமினி ஒருக்களித்துத் திரும்ப முயன்ற அதே நேரம் —

அந்த மாற்றத்தை உணர்ந்தாள்.

அறையில் வெளிச்சம் சட்டென்று மங்கிப் போக, சுழன்று கொண்டிருந்த ஃபேன் தான் சுற்றுவதை நிறுத்திக் கொண்டு ஓய ஆரம்பித்தது.

''சை! கரெண்ட் போயிடுச்சு'' கமலவேணி எரிச்சலோடு சொன்னாள்.

எழுந்து உட்கார்ந்தாள் யாமினி.

செவிப்புலன் சட்டென்று கூர்மையாயிற்று.

மின்சாரம் இல்லாமல் ஃபேன் நின்ற பின்னும் அதென்ன 'கிர்ர்ர்ர்' சத்தம்....?

அதுவும் அந்த கார்ட்போர்ட் துவாரத்துக்குப் பின்னாடியிலிருந்து? சந்தேகப் பார்வையோடு யாமினி மேஜையிலிருந்து கீழே இறங்க, கார்ட்போர்ட்டின் மறு பக்கம் தாழ்ந்த ஸ்தாயியில் ஏதோ பேச்சுக் குரல்.

'டேய் சந்திரபோஸ்.... காமிராவை ஆஃப் பண்ணு. காமிரா ஓடற சத்தம் அவ காதுல விழப் போகுது. பாழாப் போன கரெண்ட் இப்பத்தானா போகணும்?''

''சரி.... சரி.... ஆஃப் பண்ணிட்டேன். நீ பேசாதே. கேட்டுடப் போறா.''

கேட்டுவிட்டாள் யாமினி.

ஒரே பாய்ச்சலாய்த் தன் சேலைக் குப்பலின் மேல் பாய்ந்து, அதைத் தாறுமாறாய் எடுத்து உடம்பு முழுதும் சுற்றிக் கொண்டாள்.

வெறி பிடித்த மாதிரி கத்தினாள், டாக்டர் கமலவேணியைப் பார்த்து, ''நீங்கள்லாம் யாரு? என்ன பண்றீங்க?''

(தொடரும்)

# ராஜா நீ வாழ்க



**கோ**டம்பாக்கத்து பிளாட்ஃபாரங்களில் மலிவு விலைக்குக் கிடைக்கும் அதே ஸ்கிரிப்ட். அப்பாவின் பேரில் பழியைச் சுமத்தி, கொலையும் செய்துவிட்ட வில்லன்களை மகனே தனித்து நின்று பழி வாங்கும் மாமூல் மசாலா.

பிரபு தான் சபதம் போடும் மகன். நடு சபையில் முதல் வில்லனைத் தீர்த்துவிட்டு போலீஸுக்கு பயந்து தலைமறைவாகிறார். அவருக்கு உதவி செய்யும் காதலியாய் அம்பிகா. இரண்டு ரீலுக்கொருமுறை கனவிலாவது டூயட் பாடும் சுலபமோ சுலபமான வேலை.

பிரபுவைத் தேடும் போலீஸ் அதிகாரியாக சிவச்சந்திரன். அக்கரையில் குற்றவாளி ஒளிந்திருக்கிறான் என்று தெரிந்ததும் போலீஸ் என்ன செய்யும்? கரை கடந்து போய்த் தேடுவதை விடுத்து, அவன் பயணம் செய்யக் கூடிய பரிசலை அழித்துப் போட ஆர்டர் போடுமாம்! இன்ஸ்பெக்டரின் தங்கை அக்கரைக்குப் போய் பிரபுவைமணம் புரிந்து, கர்ப்பிணியாய்த் திரும்பும்வரை பொறுத்திருந்து அப்புறம் குற்றவாளி எங்கே என்று அக்கரைக்கு வந்து தேடுமாம்! போலீஸுக்கு செம்புள்ளி, கரும் புள்ளி.

கடைசி காட்சிகளில் சத்யராஜ் பிரசன்னமானபின்தான் படத்தில் ஒரு நிமிர்வு. 'டேய். நம்மளைத் திட்டறுண்டா' என்று நீளமாய் இழுத்து வசனம் பேசிவிட்டு, அவர் செய்யும் நிதானமான வில்லத்தனம் அவருடைய பிரத்யேக ஸ்டைல்!

மொத்தம் ஆறு பாடல்கள். குறைந்த பட்சம் நான்காவது இனிமை. இசை கே. ரவி.

ஒன்றுக்கிரண்டாய் ஜெயமாலினி அண்டு அனுராதா.

பிரபுவுக்கு ஏகப்பட்ட மாறு வேஷங்கள். ஒன்றில்கூட அடையாளம் மறையவில்லை!

பார்ப்பதற்கு ஆளிருக்கும்வரை இந்த மாதிரி படங்கள் வந்து கொண்டுதானிருக்கும்.

—ஜெயமன் மதன்.

# திருப்பம் ஏற்படுத்திய புத்தகம்

வாசகர் பங்கு

### தெளிவு பிறந்தது!

கடவுள் நம்பிக்கையோடு, பேய், பிசாசு, மாந்திரீகம், வேப்பிலை அடித்தல் போன்ற விஷயங்களில் நிறைய நம்பிக்கை வைத்துக் கொண்டிருந்தேன். இதனால் அடிக்கடி குழப்பமும், சஞ்சலமும் அடைந்து வந்தேன். அப்போது டாக்டர் ஆபிரஹாம் கோவூர் எழுதிய '**Begone Godmen**' என்ற புத்தகத்தைப் படிக்க நேர்ந்தது. மனித ஆற்றலுக்கு மீறிய சக்தி கிடையாது என்பதைத் தெள்ளத் தெளிவாக ஆதாரங்களுடன் விளக்கியுள்ளார் டாக்டர் கோவூர். அதைப் படித்த பிறகு மனத் தெளிவும், தன்னம்பிக்கையும் புத்துணர்ச்சியும் பெற்று, விஞ்ஞான பூர்வமாகச் சிந்திக்க ஆரம்பித்தேன்.

— என். நாகேஷ், சென்னை — 15.

### வெற்றிக்கு வழிகாட்டிய புத்தகம்

பட்டம் பெற்று மூன்று வருடங்கள் ஆன பின்பும் வேலை எதுவும் கிடைக்காததால், பெரிதும் முயற்சி செய்து, சுய வேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் வங்கிக் கடன் பெற்று, நண்பருடன் இணைந்து தொழிற்கூடம் ஆரம்பிக்க இருந்த தருவாயில், எங்களுக்கு வேண்டாதவர்களான சில விஷமிகள் ஒன்று சேர்ந்து, எங்கள் முயற்சிகளுக்கு முட்டுக் கட்டை போட்டனர். அப்போது நான் சா. கந்தசாமி எழுதிய 'சாயாவனம்' என்னும் நூலைப் படித்தேன். கிராமத்தில் கரும்பு ஆலை அமைத்து வெற்றிகரமாய் நடத்திய ஒரு தனி மனிதனின் ஆர்வத்தையும், அசுரத்தனமான முயற்சியையும் பற்றிய கதை அது. இக் கதை எனக்குப் புதிய உற்சாகத்தைத் தர நான் மனச்சோர்வு நீங்கி, என் தொழில் முயற்சியில் வியத்தகு வெற்றி கண்டேன்.

— எஸ். துரைராஜ், குறும்பூர் அஞ்சல்.

### மகாத்மா காட்டிய மன அமைதி

பொய்யான, கசப்பான வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருந்த நான், இப்போது சந்தோஷமாக இருக்கக் காரணமே மகாத்மாவின் 'சத்திய சோதனை' தான்.' அதைப் படித்தது முதல் ஒரு சத்திய, லட்சிய வாழ்வு வாழ வேண்டும் என்ற வேகம் என்னிடம் ஏற்பட்டது. ஆனால் முயன்று தோற்றுப் போனேன். சமீபத்தில் தொழில் நிமித்தமாக ஒரு கிராமத்துக்குப் போக நேர்ந்த போது அவ்விடத்தின் அமைதியும், நிம்மதியும் என்னைக் கவர்ந்தன. அந்த ஊரிலேயே தங்கி விட்டேன். இப்போது லட்சிய வாழ்வு வாழா விட்டாலும் என் குற்றம் குறைகள் பலவற்றைக் குறைத்துக் கொண்டு வாழ்வது மனத்துக்கு இதமாக இருக்கிறது.

— பி. யுவராஜா, ஒடுக்கத்தூர்.

### பயத்தைப் போக்கிய புத்தகம்

கணவனுக்குப் பிடித்தமான அன்பு மனைவியாக வாழ வேண்டும் என்பதே என் ஆசை. ஆனால் வேலைக்குப் போகும் பெண்ணான எனக்கு, கணவனுக்குப் பணிவிடைகள் செய்வதற்குக் கிடைக்கும் நேரம் மிகக் குறைவே. என் கணவரோ என்னை 'ஒரு கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க வேண்டும்' என்ற எண்ணத்துடன் சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் அடக்கி, ஒடுக்கி, கொடுமைப் படுத்தினார். இந்நிலையில் என் வாழ்க்கையை மாற்ற உதவியது டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தியின் 'எண்ணங்கள்' என்ற புத்தகமே. 'யார் ஏச்சுப் பேச்சுக்கும் பயப்படத் தேவையில்லை' என்ற உண்மையை அப்புத்தகம் எனக்கு உணர்த்தியது. அதன்படி நானும் என் கணவரிடம் உறுதியுடனும், அதே சமயத்தில் கடமை தவறாமலும் நடந்து கொள்ள ஆரம்பித்தேன். இப்பொழுது என் இல்வாழ்க்கை இனிமையாக இருக்கிறது.

— சுமி, பெங்களூர் — 1.

### நல்ல மகன் ஆனேன்!

சம்பாதித்த பணத்தைப் பெற்றோருக்கு அனுப்பி உதவ வேண்டும் என்ற உணர்வே துளியும் இல்லாமல் இஷ்டம்போல் செலவு செய்து வந்த காலத்தில் நீல. பத்மநாபனின் 'உறவுகள்' படித்தேன். ஒரு தந்தையின் அருமை பெருமைகளைப் பல கோணங்களில், பரிமாணங்களில் அந்தப் புத்தகம் எனக்கு உணர்த்தியது. அதற்குப் பிறகு வெகுவாக மாறிப் போனேன் — என் தந்தையைத் தீவிரமாக நேசிக்க ஆரம்பித்தேன். என் தேவைகளைக் குறைத்துக் கொண்டு, குடும்பத்துக்கு உதவப் பணம் அனுப்பினேன்.

— எஸ். சுந்தரராஜ், மதுரை — 2

### மயக்கத்திற்கு மாமருந்து

நான் ஆறாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்த காலத்தில் எனக்குப் 'படிப்பு வராது' என்று என் ஜாதகத்தில் உள்ளதாகப் பெரியோர்கள் பார்த்துவிட்டு, என் பள்ளிப் படிப்பைப் பாதியிலேயே நிறுத்திவிடத் தீர்மானித்தனர். நானும்செய்வதறியாது மயங்கி நின்றேன். ஒரு நாள் தமிழ் வகுப்பில் என் மயக்கத்திற்கு மாமருந்து கிடைத்தது:

''தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலிதரும்.''

என்ற குறளே என் வாழ்க்கையில் அறியாமையைப் போக்கி, திருப்பம் ஏற்படுத்தியது.

— சி. ஏ. சண்முகம், சேலம்—7.

### தீய பழக்கம் ஒழிந்தது

நாளொன்றுக்குச் சுமார் 25 ரூபாய்க்கு மது வாங்கிக் குடித்து உடம்பைக் கெடுத்துக் கொண்டு, குடும்ப வாழ்க்கையையும் நரகமாக்கிக் கொண்டிருந்தான் என் நண்பன். சிவசங்கரி எழுதிய 'ஒரு மனிதனின் கதை'யை வாங்கி, அவன் திருமண தினத்தன்று பரிசளித்தேன். அதைப் படித்த பிறகு, 'இனி மதுவைத் தொடுவதில்லை' என்று மனைவியிடமும், என்னிடமும் கற்பூரத்தை அணைத்துச் சத்தியம் செய்தவன், இந்த மூன்று ஆண்டுகளாக அந்தச் சத்தியத்தைக் கடைப்பிடித்தும் வருகிறான்.

— எம். சாமிநாதன், சென்னை— 19.

### தன்னம்பிக்கை துளிர்த்தது

**The Amazing Results of Positive Thinking** என்ற நூலை எழுதியவர் நார்மன் வின்ஸன்ட் பீல்! அதில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ள ஒரு சம்பவம்: 'வேலைக்கான நேர்முகத் தேர்வுக்குச் செல்லும் ஓர் இளைஞன் மானேஜரிடம் ஒரு சீட்டைக் கொடுத்து அனுப்புகிறான். அதில், 'நான் க்யூவில் இருபத்தோராவது நபராய் இருக்கிறேன். ஆகையால், தயவு செய்து என்னைப் பார்ப்பதற்கு முன் எந்த அவசர முடிவையும் எடுக்க வேண்டாம்' என்று எழுதியுள்ளது.' 'இத்தகையவனுக்கு வேலை கிடைக்காமலும் போகுமா?' என்று கேட்கிறார் ஆசிரியர்.

இதைப் படித்ததும் எனக்கும் ஒரு நாள் நிச்சயமாய் வேலை கிடைத்துவிடும் என்ற தன்னம்பிக்கை உருவாகியது.

— பி. ரங்கஸ்வாமி, செகந்தராபாத்— 3.

### துணிவைத் தந்தது

பாலகுமாரன் எழுதிய 'அகல்யா' என்ற கதையின் நாயகன் தீவிரமான பாரதி பக்தன்.





அவன் ஒரு விதவையைத் திருமணம் செய்து கொள்கிறான். நாளிதழில் அவன் கொடுத்த விளம்பரத்தைப் பார்த்துவிட்டு அவனைத் தேடி வரும் விதவைப் பெண்ணுக்கும் அவனுக்கும் இடையே நடக்கும் உரையாடல் என்னை வெகுவாகப் பாதித்தது. என் வாழ்க்கையிலும் நான் காதலித்த தாழ்த்தப்பட்ட இனத்துப் பெண்ணைக் குடும்பத்தின் எதிர்ப்பைப் பாராட்டாமல் துணிந்து திருமணம் செய்து கொள்ள எனக்குத் தைரியம் அளித்தது.

— டி. ஏ. மேகநாதன், சென்னை—11.

### என்னை முற்றிலும் மாற்றிய நூல்

சற்று சங்கோஜமான சுபாவத்தோடு, யாரோடும் கலகலவென்று பழகாமல் இருந்த என்னை முற்றிலும் மாற்றியது டேல் கார்னஜியின் **'How to win Friends and Influence People'** என்ற நூல். அதைப் பலமுறை படித்து அதன்வழி நடக்கும் நான் இன்று எல்லோராலும் விரும்பப்படுபவன். பொது ஜனத் தொடர்பில் மன்னன். இப்புத்தகத்தை ஒவ்வொரு கல்லூரியிலும் பாடமாக வைக்க நான் சிபாரிசு செய்கிறேன்.

— டி. என். முகுந்த், சென்னை—41.

### வாழ்க்கையின் அர்த்தம் விளங்கியது

இரண்டு வருடங்களுக்கு முன் என் கணவருக்குத் திடீரென்று டெல்லிக்கு வேலை மாற்றல் ஆகிவிட்டது. குழந்தைகளின் பள்ளி அட்மிஷன், வீடு தேடும் முயற்சி, போன்ற இதர விஷயங்களிலெல்லாம் முட்டுக்கட்டைகளும், துன்பமும் ஏராளம். அப்போது ஸ்வாமி வீரேஸ்வரானந்தா எழுதிய பகவத் கீதையின் ஆங்கிலப் பதிப்பு என் கையில் கிடைத்தது. அதைப் படித்ததும் மனத்தில் புத்துணர்ச்சியும், செய்யும் காரியங்களில் சிரத்தையும் புதிதாக உண்டாயின. வாழ்க்கையின் அர்த்தமே அப்போதுதான் புரிய ஆரம்பித்தது. இன்று அந்தப் புத்தகத்தை வாங்கி, பொக்கிஷம் போல் பாதுகாத்து வருகிறேன்.

— ஸரஸ்வதி ஷங்கர், புதுடெல்லி—64.

### அமைதியைப் போதித்த கதாபாத்திரம்

கல்கியின் பொன்னியின் செல்வனே என் வாழ்க்கையில் திருப்பத்தை ஏற்படுத்தியது. அதில் இடம்பெற்றுள்ள குந்தவையின் மென்மையான குணங்களும், கம்பீரமும், நளினமும் என்னைக் கவர்ந்து விட்டன. அவளை இலட்சியப் பெண்ணாகக் கொண்டேன். கல்லூரிப் பருவத்தில் உணர்ச்சிகளை அத்து மீறி வெளிப்படுத்திய அழு மூஞ்சியும், சிடு மூஞ்சியுமாக இருந்த நான் இன்று அமைதியே உருவாக, மாமியார் மெச்சும் மருமகளாகவும், அதிகாரிகள் புகழும் அலுவலராகவும் வாழ்ந்து வருகிறேன்.

— தா. பானு, தர்மபுரி—1.

### பிறவியின் பொருளை உணர்ந்தேன்

ரயில் பிரயாணத்தின் போது 'ஹெரால்டு ராபின்ஸ்' புத்தகத்தைத்தான் நான் வாங்குவது வழக்கம். ஒரு முறை பரம ஹம்ச யோகானந்தா எழுதிய **'Autobiography of an Yogi'** என்ற புத்தகம் கண்ணில் படவும், அதை வாங்கித் தான் பார்ப்போமே' என்று வாங்கிப் புரட்டலானேன். இன்றைக்கு அந்த நூல்தான் நான் போற்றும் பொக்கிஷம். இறையுணர்வு இன்றி நான் வீணாக்கிய நாட்களைக் குறித்து என்னைச் சிந்திக்கச் செய்தது — பிறவிப் பொருளை உணர்த்தியது — இத்தனையையும் எளிய நடையில் கதை போல் அமைந்தே சாதித்தது.

— டி. நாச்சியப்பன், திருச்சி—2.

---

**ப்ளோப்ளாஸ்ட் வழங்கும் வி. ஐ. பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:**

**சுமி,**
**Programmer — LIC,**
**Civil Station Branch,**
**M. G. Road,**
**Bangalore — 560 001.**



# சித்தரஞ்சனி

**27**

சாண்டில்யன்

## கருடா சுகமா?

**கௌ**தமிபுத்ரனைக் கண்டதும் நாகபாணன் முதலில் பெரும் பிரமிப்பை அடைந்தானானாலும் வெகு சீக்கிரம் தனது வியப்பை உதறிக் கொண்டு, "எங்கள் வேஷம் உனக்கு நன்றாகப் பொருந்தியிருக்கிறது" என்று கூறிவிட்டுத் தனது ஆசனத்திலிருந்து எழுந்திருக்க முயன்றான்.

அவன் முயற்சியை முளையிலேயே கிள்ள முயன்ற கௌதமிபுத்ரன் "மகாக்ஷத்ரபா நிலையில் நான் இருந்தால் உட்கார்ந்த இடத்தை விட்டு அசைய மாட்டேன்" என்று எச்சரிக்கை ஒலித்த குரலில் பேசினான்.

நாகபாணன் முகத்தில் மெள்ளச் சிறிது உதயமாயிற்று. "என் நிலைக்கு என்ன இப்பொழுது?" என்று வினவவும் செய்தான் சினம் மிகுந்த குரலில்.

"இதைவிட ஆபத்தான நிலையில் யாரும் இருக்க முடியாது. நீ உட்கார்ந்திருக்கிறாய் நாகபாணா. நான் நின்றிருக்கிறேன். எனது இடையிலுள்ள குறுவாளை எந்த வினாடியிலும் உன் மீது வீசிவிட முடியும். ஆனால் கொலை செய்ய நான் வரவில்லை" என்றான் கௌதமிபுத்ரன்.

"வேறு எதற்கு வந்தாய்?" என்ற நாகபாணன் கேள்வியில் கோபம் இருந்தது.

"உன்னை இந்த மரக்கலத்தில் இன்று சந்திப்பதாகச் சொல்லியிருந்தேன். அந்த வாக்கைக் காப்பாற்ற வந்தேன்."

"மகாராஷ்டிரத்திலிருந்து எனது மரக்கலங்கள் இன்று வருமென்பது உனக்கு எப்படித் தெரியும்?"

"பெரிய சாம்ராஜ்யத்தை நிறுவ விரும்புபவன் கண்கள் எங்கும் இருக்கும். எனது ஒற்றர்கள் வடகொங்கணத்திலும் மகாராஷ்டிரத்திலும்கூட இருக்கிறார்கள்."

"சாம்ராஜ்யதிபதியாக உத்தேசமா?"

"அந்த விருப்பம் எல்லோருக்கும் உண்டு. நீ இங்கு வந்ததும் உன் அரசை விஸ்தரிக்கத்தானே?"

இதைக் கேட்ட நாகபாணன் சிறிது சிந்தனையில் இறங்கினான். பிறகு கேட்டான்: "இந்தப் புது மரக்கலங்களின் தலைவனை என்ன செய்தாய்? அவன் உடைகளை நீ அணிந்திருக்கிறாயே?" என்று.

நாகபாணன் கேள்வியைக் காதில் வாங்கியதும் முகத்தில் பொய் வருத்தத்தைப் படரவிட்டுக் கொண்ட கௌதமிபுத்ரன், "அந்தத் தலைவனும் கரையில் இறங்கி மலைப்பாறை மறைவிலிருந்து சைகை செய்து தனது வீரர்களைக் காட்டுப் பகுதிகளில் இறக்கியிருக்கக் கூடாது. ரகசியமாக மரக்கலங்கள் வந்தாலும் கரையிலிருப்பவர்கள் கண்காணிப்பார்களென்பதைப் புரிந்து கொண்டிருக்க வேண்டும். எந்த யோசனையுமின்றித் தலைவன் காட்டுக்குள் வந்ததால் அவனைக் கட்டிப் போட்டு அவன் உடையை நான் அணிய வேண்டியதாயிற்று. தவிர எனது உடையை அவனுக்குப் போட்டிருக்கிறேன். அந்த உடையைப்



பார்த்து அவனை நானென்று நினைத்து அவன் வீரர்களை கொன்று போட்டாலும் போடலாம். அப்படி ஏதாவது ஏற்பட்டால் பொறுப்பு நானல்ல'' என்று நடந்ததை அப்படியே விளக்கினான்..

அவன் விளக்க விளக்க உள்ளூர ஆத்திரமடைந்தாலும் அதை வெளிக்குக் காட்டாத நாகபாணன், ''இங்கு நீ தனிமையில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறாயே. எப்படித் தப்புவதாக உத்தேசம்?'' என்று வினவினான்.

''இங்கு நாமிருவருமே தனிமையில் இருக்கிறோம். ஒருவரிடம் ஒருவர் தனிமையில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறோம். எனக்கு ஆபத்து நேரிடு முன்பு நீ உயிருடனிருக்க மாட்டாய். நமது இருவர் உயிரும் பரஸ்பரம் பிணைக்கப்பட்டிருக்கிறது'' என்று சுட்டிக் காட்டிய கௌதமிபுத்ரன் சற்று முன்னால் நகர்ந்து இடது கையைப் பின்புறம் செலுத்திக் கதவைத் தாளிட்டுவிட்டு ''நாகபாணா! நீ ரகசியமாகப் படைகளைக் கோட்டையில் திரட்டியிருப்பது எனக்குத் தெரியும். இந்த மரக்கலங்களில் கரையில் இறங்கிய .சில



## அருள்வாக்கு

பகவானை எதற்காகப் பிரார்த்தனை பண்ண வேண்டும் என்பதில் அபிப்ராய பேதங்கள் உண்டு.

இந்தலோகவாழ்க்கையில்நமக்குஎண்ணி முடியாத கஷ்டங்கள், ச்ரமங்கள், க்லேசங்கள், துக்கங்கள் ஏற்படுகின்றன. சரீரக் கஷ்டம், மன சஞ்சலம், பண முடை, பயம், அவமானம். இப்படியாகக் கணக்கேயில்லாமல் அவதிப்படுகிறோம். இவை தீருவதற்கு வேறு வேறு வழிகளைத் தேடுகிறோம். உடம்பு ஸரியில்லை என்றால் டாக்டரிடம் போகிறோம். பணக் கஷ்டம் என்றால் கடன் கொடுக்கக் கூடியவர்களிடம் போகிறோம். ஆவிகள் சேஷ்டை என்றால் மாந்த்ரிகரிடம் போகிறோம். பலவிதமான பிரச்னைகள் தீர



ராஜாங்க அதிகாரிகளிடம் போகிறோம். இப்படிப் பல பேரிடம் போனாலும் இந்தக் கஷ்டங்கள் தீர பகவானையும் பிரார்த்தனை பண்ணிக் கொள்கிறோம். நாம் கஷ்டம் தீர யாரைத் தேடிப் போகிறோமோ, அவர்கள் நமக்கு அநுகூலமாக இருப்பதற்கு பகவானைப் பிரார்த்திக்கிறோம். டாக்டர் மருந்துதான் கொடுப்பார். அது நமக்குப் பலிக்க வேண்டுமே! இதற்காக பகவானை வேண்டிக் கொள்கிறோம். ஒருத்தர் ஸஹாயம் செய்வார் என்று அவரிடம் போகிறோம். ஆனால் போகிற வழியிலேயே நமக்கு ஒரு விபத்து வந்துவிட்டால் என்ன பண்ணுவது? இதற்காகப்பிரார்த்தனை பண்ணுகிறோம்.

இந்த மாதிரியெல்லாம் பிரார்த்தனை பண்ணுவது தப்பு என்று சில பேருக்கு அபிப்ராயம். அது பற்றி அடுத்த இதழில் பார்ப்போம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

வீரர்களைத்தவிர இரண்டாயிரத்துக்குக் குறைவில்லாத படை வீரர்கள் வந்திருப்பதும் எனக்குத் தெரியும். நானும் சித்தமாயிருக்கிறேன் போருக்கு. போரிடுவதானாலும் சரி அல்லது நீ உன் படைகளுடன் கோட்டையை விட்டுப் போய் விடுவதானாலும் சரி, இரண்டுக்கும் நான் ஒப்புதல் தருவேன்'' என்று கூறிவிட்டு நட்ட நடு அறைக்கு நகர்ந்தான்.

இத்தனைக்கும் மகாக்ஷத்ரபன் உட்கார்ந்திருந்த இடத்தைவிட்டு நகரவில்லை. நன்றாக நிமிர்ந்து கௌதமிபுத்ரனைப் பார்த்தான். ''உன்னிடமிருப்பது மலைக்காட்டு மக்கள். போரில் பயிற்சியில்லாதவர்கள். பயிற்சியற்ற அவர்கள் எனது படையுடன் எப்படிப் போராட முடியும்?'' என்று வினவினான்.

''இது அவர்கள் பூமி. இதைக் காப்பது அவர்கள் கடமை. உரிமையென்று வந்தால் இவர்கள் உயிரைக் கொடுக்கச் சித்தமாயிருப்பார்கள். நீ சிருஷ்டித்த போலிப் பிசாசுக்குத்தான் பயந்தார்களேயொழியப் போருக்குப் பயப்படமாட்டார்கள். தவிர....

''சொல் சதகர்ணி.''

''தவிர நீ ஏதுமறியாதவன் போல் நடித்தாலும் நான் படைகளை வரவழைத்திருப்பது உனக்குத் தெரியும். ஹோமப் புகையை மற்றவர் நம்பினாலும் நீ நம்பமாட்டாய் என்பது எனக்குத் தெரியும். நீ எந்த்வித சேதமுமின்றி இங்கிருந்து திரும்பிச் செல்ல அனுமதி தருகிறேன்.

இதைக் கேட்ட நாகபாணன் நகைத்தான் பெரிதாக. ''அனுமதி கொடுக்கிறாயா! நாகபாணனுக்கு அனுமதி கொடுக்கிறேனென்று சொல்லிப் பிழைத்தவன் கிடையாது'' என்று கூவினான் நகைப்பின் ஊடே. அடுத்துத் தனக்கு எதிரிலிருந்த சாளரத்தின் மூலம் ஏதோ சைகை காட்டினான்.

பிறகு நடந்தது பிரளயம். கௌதமிபுத்ரன் ஒரே பாய்ச்சலில் நாகபாணனை அணுகித் தனது குறுவாளை அவனது மார்பில் ஊன்றி, ''பேசாமல் என்னுடன் வா'' என்று ரகசியமாகச் சொல்லி, அவனைக் கதவு நோக்கி அழைத்துச் சென்றான். ''நாம் இப்பொழுது ஒன்றாக, நண்பர்களாக கனரக்குச் செல்வோம். அல்லது நீ உடனே பிணமாகி விடுவாய். பிறகு நான் போரிட்டு மடிவேன். உனக்கு எது இஷ்டமோ அதை செய்யலாம்'' என்று கூறி நாகபாணன் கழுத்தில் கையைப் போட்டுக் கொண்டு கதவைத் திறந்து வெளியே நடக்க முற்பட்டான். கதவைத் திறக்குமுன்பு, ''என் இடது கைதான் உன் கழுத்தைச் சுற்றியிருக்கிறது. வலது கை குறுவாளின் அருகிலேயே இருக்கிறது'' என்றும் எச்சரித்தான்.

இப்படி நாகபாணனும் கௌதமிபுத்ரனும் அன்யோன்யமாக நடந்து வந்ததால் மாலுமிகள் யாரும் அவர்களை அணுகவில்லை. மரக்கலப் பலகையை அணுகியதும் நூலேணியும் தொங்கவிடப்பட்டது. நூலேணியில் முதலில் நாகபாணனை இறங்கச் சொல்லி, பின்னால் இறங்கிய கௌதமிபுத்ரன் படகின் துடுப்பு

வந்தவர்: அன்னதானம் செய்யப் போறோம். உங்க உதவியும் தேவை.

கடை முதலாளி: நான் அவசியம் வந்து சாப்பாட்டில் கலந்து கொள்கிறேன்.

வந்தவர்: அதைத் தவிர...?

கடை முதலாளி: வீட்டுக்கும் காரியரில் சாப்பாடு எடுத்துக்கிட்டுப் போறேன்.

வந்தவர்: ஏதோ உங்களால் முடிந்த......

கடை முதலாளி: கடைப் பையன்களையும் சாப்பிட வரச் சொல்கிறேன். ஏதோ என்னால் உங்களுக்குத் தானம் செய்த புண்ணியம் சேரட்டும்.

— எஸ். கே. வேணி.



கலைத் தானே ஏந்தித் துழாவிப் படகைச் செலுத்தினான்.

இத்தனைக்கும் இதழ்களில் புன்முறுவலைத் தவழவிட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்த நாகபாணனின் நெஞ்சுரத்தைக் கண்டு வியந்த கௌதமிபுத்ரன், "நாகபாணா! நாளை வரை இங்கு அமைதி நிலவும். நாளை மாலைக்குள் உங்கள் படைகள் திரும்பிச் செல்லாவிட்டால் எனது படைகள் தாக்குதலில் இறங்கும். இதைச் சொல்லவே நான் வந்தேன். சீக்கிரம் ஒரு நல்ல முடிவுக்கு வந்துவிடு நாகபாணா! இல்லையேல் எனது புதுப் படைத் தலைவன் படைகளுடன் வருவான்" என்றான்.

நாகபாணன் புருவங்கள் கேள்வி கேட்பதற்கு அறிகுறியாகச் சற்றே உயர்ந்தன. "புதுப் படைத் தலைவனா! அவன் யார்?" என்று வினவினான்.

"காஷ்டானன்." இதைச் சர்வ சகஜமாகச் சொன்னான் சாதவாகனன்.

"என்ன! காஷ்டானனா!" என்று பிரமிப்புடன் கேட்டான் மகாக்ஷத்ரபன்.

"ஆம்."

"அவனா உன் படைத் தலைவன்?"

"ஆம்."

"அவனைக் கொண்டா என்னைத் தாக்கப் போகிறாய்?"

"ஆம்."

"உனக்குச் சித்தப்பிரமை ஏதுமில்லையே?"

"இருப்பதாகத் தெரியவில்லை. ஏன் கேட்கிறாய்?"

"அந்தக் கோழையை வைத்துக் கொண்டு போரிட முடியுமென்று நினைக்கிறாயா? அதைவிட நீ தற்கொலை செய்து கொள்ளலாமே" என்றான் நாகபாணன்.

இதற்கு நேரிடையாகப் பதில் சொல்லவில்லை சாதவாகனன். "புராணம் படித்திருக்கிறாயா, நாகபாணா?" என்று கேட்டான்.

"படித்திருக்கிறேன்."

"ராமன் காகாசுரன் மீது புல்லைத்தான் பிரயோகித்தான். அது பிரம்மாஸ்திரமாயிற்று."

"அப்பொழுது காஷ்டானன் புல்லா?"

"இல்லை. பிரம்மாஸ்திரம். பொறுத்திருந்து பார்" என்று சாதவாகனன் கூறினான்.

இதற்குள் வாசிஷ்டியின் முகத்துவாரம் வந்துவிட்டவே கரையோரமாகப் படகைச் செலுத்திய கௌதமிபுத்ரன் கரையில் முன்னதாகக் குதித்து நாகபாணனைக் கையைப் பிடித்துக் கரையில் இறக்க முற்பட்டான். தன்னிடம் நீட்டிய கையை இரும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்ட நாகபாணன் தனது இன்னொரு கையை மேலே தூக்கி ஆட்டினான்.

அதைத் தொடர்ந்து தடதடவென்று பல வீரர்கள் விரைந்து வரும் ஒலி கேட்டது. சில விநாடிகளுக்குள்ளாகச் சுமார் இருபது வீரர்கள் உருவிய வாளுடன் படகை நெருங்கி விட்டார்கள். நாகபாணன் மிகுந்த உற்சாகத்திலிருந்தான். "சாதவாகனா! உன் துணிவுக்கும் ஓர் எல்லையிருக்க வேண்டும். நாகபாணனை மிகக் குறைவாக எடை போட்டு விட்டாய்" என்று கூறிய மகாக்ஷத்ரபன் வீரர்களை நோக்கி, "இவனைக் கொல்ல வேண்டாம். சிறை செய்து கோட்டைக்குக் கொண்டு செல்லுங்கள்" என்று உத்தரவிட்டான். அடுத்து நகைத்தது நாகபாணனல்ல. கௌதமிபுத்ரன் நகைத்தான். நாகபாணனுக்கு ஏதும் புரியாததால் "சொல்வது உங்கள் காதில் விழவில்லை?" என்று வீரர்களை நோக்கிச் சீறினான்.

"வீரர்கள் இயங்க எனது உத்தரவு தேவை" என்று சொல்லிக் கொண்டே பின்னாலிருந்து வந்தான் காஷ்டானன். தனக்குப் பைத்தியம் பிடிக்கவில்லை என்பதை நிச்சயம் செய்து கொள்ளத் தலையை இருமுறை ஆட்டிக் கொண்டான் நாகபாணன்.

போதாக்குறைக்கு காஷ்டானன் முன்னால் வந்து "மகாக்ஷத்ரபரே! உங்கள் வாளைக் கொடுத்துவிடுங்கள். உங்களைப் பலவந்தமாகச் சிறைப்படுத்த நான் விரும்பவில்லை" என்றான், கையையும் நீட்டினான்.

அத்து மீறிய உணர்ச்சிகளாலும் பிரமிப்பினாலும் வாழ்க்கையில் முதன்முதலாகச் செயலிழந்து நின்றான் நாகபாணன். "காஷ்டானனா! உனக்கு எங்கிருந்து இத்தனை துணிவு வந்தது?" என்று கேட்டான்.

"எல்லாம் இருக்கும் இடத்தைப் பொறுத்தது" என்ற கௌதமிபுத்ரன் "சிவபிரான் தலையிலிருந்த நாகம் கருடா சுகமா என்று கேட்கவில்லை?" என்று உவமை காட்டினான்.

(தொடரும்)

# வாயில்லா ஜீவன்களை வங்கிகள் வதைக்கும் கொடுமை!

அண்மையில் திருச்சி மாவட்டம் திருவெறும்பூரில் ஒரு பரிதாபக் காட்சியைக் காண நேர்ந்தது. ஒரு கம்பியைப் பழுக்கக் காய்ச்சி, கால்கள் கட்டிப் போடப்பட்டிருந்த ஒரு மாட்டின் உடம்பில் 371 என்ற எண்ணை எழுதினர். அப்போது அந்த வாயில்லா ஜீவன் துடித்த துடிப்பு பரிதாபகரமாக இருந்தது. நான் அவர்களை அணுகி விசாரித்த போது அவர்கள் சொன்னது: நாங்க பாங்கில் கடன் வாங்கி இந்த மாடுங்களை வாங்கறோம். வாங்கற மாட்டுக்கு அடையாளம் வைக்க பாங்க் காரங்க இந்த மாதிரி நம்பர் எழுதச் சொல்றாங்க!' நலிந்தவருக்கு உதவுவதாகக் கூறிக் கொண்டு வங்கிகள் மாடுகளை இம்சை செய்ய வேண்டுமா? எஸ். பி. ஸி. ஏ. காரர்கள் இதனைக் கவனிப்பது இல்லையா?

— எஸ். ஆரோன்பிரபு, திருச்சி—17.

## எதற்கும் ஓர் எல்லை இல்லையா?

இளையராஜாவின் இசைக்கச்சேரிகேட்கச் சென்றோம். இசைக் கச்சேரி முடிந்ததும் பஸ் வசதி உண்டு என்ற அறிவிப்பின் பயனாகக் கூட்டம் கட்டுக்கடங்கவில்லை. நடத்துனரோ, அவர் நோக்கம்போல் பயணச் சீட்டை வெளியில் இருந்தபடியே கொடுத்துக் கொண்டிருந்தார். அறுபது பேர் ஏறக் கூடிய வண்டியில் ஏறத்தாழ இருநூறு பேர் ஏறிக் கொண்டிருந்தனர். சிலர் பஸ்ஸின் மேல் டாப்பிலும் ஏறிக் கொண்டிருந்தனர். வெகு நேரம் சென்று வண்டியை எடுத்தனர். பளுவினால் வண்டி நகர முடியவில்லை. சிறிது தூரம் சென்றதும் வண்டி ஒரு பள்ளத்தில் மிகவும் சாய்வாக நின்றுவிட்டது! கூரை மேல் ஏறி இருப்பவர்களை இறங்கச் சொல்லி எவ்வளவு கேட்டும் இறங்குகிற மாதிரி இல்லை.

அப்போது ஒரு போலீஸ் வேன் வர அதை நடத்துனரும், ஓட்டுனரும் மறித்து, விஷயத்தைக் கூற அதில் இருந்த சப்—இன்ஸ்பெக்டர் இறங்கி வரவும் பஸ்ஸின் மேல் கூரையில் இருந்தவர்கள் கீழே குதித்து ஓடினர். ஒருவழியாக வண்டி போடிக்கு வந்து சேர அதிகாலை மூன்றரை மணி ஆகிவிட்டது.

நடத்துனரின் கலெக்ஷன் பேட்டா ஆசையினால், நாங்கள் எவ்வளவு சொல்லியும் கேட்காமல் அளவுக்கு மீறி டிக்கெட் போட்டதால் வந்த வம்பு இது. இதை யார் கேட்பது?

— வைர. சண்முகசுந்தரம்,
போடிநாயக்கனூர்.

## சுகாதாரமற்ற சென்னை!

சென்னையில் தினமும் வியாபார ரீதியாகப் பல இடங்களுக்குச் சென்று வருகிறேன். ஒரு தெருவாவது சுத்தமாக இல்லை. குப்பைகள் அகற்றப்படாமலும், ரோடுகள் சீர் செய்யப்படாமலும் இருக்கின்றன. குடிசைப் பகுதிகள் பற்றிக் கேட்கவே வேண்டாம்.

மெரீனாவைத் தூய்மைப் படுத்தும் முன் நகரிலுள்ள எல்லாத் தெருக்களையும் குப்பையின்றித் தினமும் சுத்தமாக்க வேண்டும். குடிசைப் பகுதிகளைத் தினமும் சுத்தப்படுத்தி, ஏழைகளுக்கு நல்ல காற்று கிடைக்கும்படிச் செய்ய வேண்டும். இதைச் செய்தாலே சென்னை அழகும் தூய்மையும் பெற்று, நல்ல காற்றும் ஆரோக்கியமும் கிடைக்கும். ஆனால் மாநகராட்சியின் காதுகளில் உறைக்குமா? அதுதானே நம்மைப் பிடித்த சங்கடம்!

— டி. வி. எஸ். வாசன், சென்னை—4.

வாசகர் குமுறல்

"பெற்று, பேணி வளர்த்த பெண்ணுக்கு கல்யாணமென்றால்
பெற்றோர்களுக்கு மகிழ்ச்சிதானே?

எங்கள் பெண்ணிற்கு ஒரு நல்ல இடத்தில் கல்யாணம்
நிச்சயமாகியிருக்கிறது.

"கல்யாணம் செய்துப் பார்" என்று பெரியவர்கள் சொல்வது
உண்மைதான்!

எவ்வளவு அலைச்சல், எவ்வளவு ஏற்பாடுகள்!

வசதியான கல்யாண மண்டபத்தைத் தேர்ந்தெடுப்பதிலிருந்து,
கல்யாணப் பத்திரிகைகள் அனுப்புவது வரை ஆயிரம் வேலைகள்!

ஸ்பெஷலாக நெய்த கூறைப்புடவை, எங்கள் மகளே
டிசைன் செய்த தங்க நகைகள், பாத்திரம் பண்டங்கள் என்று
நீண்ட பட்டியலே போட்டு வாங்கினோம்.

இதையெல்லாம் பொறுக்கியெடுக்க கடை கடையாக ஏறி
அலைந்தாலும், எவர்சில்வர் பாத்திரங்கள் வாங்கும்போது எதை
வாங்கலாம் என்பதில் எங்களுக்கு ஒரு சந்தேகமும் இல்லை.

வேறென்ன, சேலம் எவர்சில்வரில் செய்த பாத்திரங்கள்தான்!

அந்த காலத்தில் கிடைத்த பாத்திரங்களைப்போலவே நல்ல
தரமானவை. கறும்புள்ளிகளோ, கறையோ பிடிக்காது.
வாழ்நாள் முழுவதும் பளபளப்பு குறையாமல்
உழைக்கக்கூடியவை.

வேறென்ன வேண்டும் எங்கள் மகளுக்கு!"

சேலம் எவர்சில்வரினால்
தயாரிக்கப்பட்ட பாத்திரங்கள்
எல்லா பிரபலமான
பாத்திரக்கடைகளிலும் கிடைக்கும்.

## சேலம் எவர்சில்வர்.
## நம்பிக்கைக்குப் பாத்திரமான பாத்திரங்கள்.



சேலம் உருக்காலை

Sista's-SSP. 366. 85 TM A


எதிர்பார்ப்புக்கு
அப்பாற்பட்ட அரியதொரு படைப்பு!
மோதி காண்டினெண்டல்
R80 நைலான் கார் டயர்

மைலேஜ்

ஆம், உண்மையைச் சொல்லப்போனால், இது ஒரு ஒப்பற்ற, அரிய படைப்பு !

## ஆராய்ச்சியே இதன் முதலீடு

பல கோடி ரூபாய் செலவிலான மோதி காண்டினெண்டல் ஆராய்ச்சியே, நிகரற்ற தொழில் நுட்பச் சிறப்புடைய இந்த R80 நைலான் கார் டயரைப் படைத்துள்ளது.

## மேலும் பல சிறப்புகள்.

உயரிய R80 ப்ரீமியம் டயர், கூடுதல் அகலம் கொண்டதால், அதிக உறுதியான பிடிமானத்தைத் தருகிறது.

சாலையில் நீங்கள் செல்லும் போது, இதுவரை அறிந்திராத அந்த ஒரு பிடிமானத்தை R80 அளிப்பதற்கு இன்னும் இரு காரணங்கள் : விஞ்ஞான ரீதியில் வடிவமைக்கப் பட்ட, 15% அதிக நான்-ஸ்கிட் டெப்த் (சறுக்காமல், வழுகாமல் இருக்க 15% அதிக ஆழமுடையது) அடங்கிய ட்ரட் பரப்பு. நெளிந்து, வளைந்து அமைக்கப்பட்ட ஏழு ரிப்புகள்.

## எதிர்பார்ப்புகளுக்கு அப்பாற்பட்டது.

ஆம், இது எதிர்பார்ப்புகளுக்கு அப்பாற்பட்ட ஒரு படைப்பு இதனால் நீங்கள் ஒரு போதும் நினைத்துப் பார்த்திராத மேம்பட்ட மைலேஜ் இப்பொழுது கிடைத்திடும் வாய்ப்புள்ளது. உயரிய தொழில்திறன் அளித்திடும் இந்த வாய்ப்பினை நழுவ விட்டு விடாதீர்கள். R80 க்கு மாறுங்கள்- இனி நீங்கள் வேறெந்த டயருக்கும் மாறமாட்டீர்கள்.



# மோதி காண்டினெண்டல்

ஒரு போதும் அயராத டயர்

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி

# கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள
புதிய விஐபி கன்கார்டு! நாகரீக
சரம்போடிய அலாதி ஸ்டைலிங்.
கண்டறியாத வர்ண வகைகள்:
பீச் க்ரீம் (செவ்விள மஞ்சள்),
டெஸர்ட் பிரவுன் (மணற் கபில
நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச்
சாம்பல்), க்ரீம் சாக்கலேட்,
மேலும் பலப் பல. உட்புறமோ
இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்:
அருகிலுள்ள வியாபாரியிடம்...
சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,**
**வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

LINTAS VIP M 10 2013 TM




# உமது நிருபர் என்ன வெளிநாட்டுக்காரரா?

**வாழ்த்துகிறோம்!**

* அப்பாவிக் குழந்தைகளின் சோகக் கதை எம் கண்களில் நீரை நிறைத்துவிட்டது. டாக்டர் பிரசாத்தின் சேவையை அரசாங்கம் பாராட்டாவிட்டாலும் பல நெஞ்சங்கள் அவரை மனமார வாழ்த்துகின்றன. அவரின் சேவை மேலும் மேலும் வளர எங்களின் பாராட்டைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

காரைக்குடி. கவிப் பிரியன்.

**அழவும் வைக்கிறீர்கள்!**

* இதுவரை, கவர் ஸ்டோரியின் மூலமாக எங்களைச் சிந்திக்க வைத்து வந்த நீங்கள், இந்த இதழில் வெளியான 'இயற்கை இரக்கம் காட்டவில்லை; அரசும் ஆதரவு காட்டவில்லை' கவர் ஸ்டோரியின் மூலமாக கண்ணீரையும்விட வைத்து விட்டீர்கள்!

திருச்சி—20. ஆர். அப்துல் சலாம்.

**நாங்கள் தயார்!**

* அப்பாவிக் குழந்தைகளின் சோகக் கதை, அழிக்க முடியாத கண்ணீர்க் கோலங்களை மனத்தில் வரைந்து விட்டது. டாக்டர் பிரசாத்தின் உயரிய பணியைப் பாராட்ட வார்த்தைகளே கிடைக்கவில்லை! இயற்கை இரக்கம் காட்டவில்லை என்றாலும் நாங்கள் உதவி செய்யக் காத்திருக்கிறோம். விளக்கம் தாருங்களேன்.

ஒண்டிப்புதூர். கா.க. வேலாயுதன்.

**'டீ கூட சாப்பிட்டதில்லை!**

* 'பாத்வே' என்ற எங்கள் அமைப்பைப் பற்றித் தாங்கள் எழுதியுள்ள கட்டுரைக்கு மிக்க நன்றி. தலைப்பும் கட்டுரையின் சில வரிகளும் வாசகர்களுக்குத் தவறான எண்ணங்களை உண்டாக்கக் கூடும். அரசு அதிகாரிகளும் அமைச்சர்களும் எங்களிடம் மிகவும் உதவிகரமாகவும் அனுதாபத்துடனும் நடந்து கொண்டிருக்கிறார்கள் என்பதைத் தெளிவு படுத்த விரும்புகிறோம். எந்த ஓர் அதிகாரியும் எந்த நேரத்திலும் எங்களிடம் சொந்தம் கொண்டாடியதில்லை; ஒரு கப் டீ கூட சாப்பிட்டதில்லை!

இந்த நிறுவனத்திற்கு உதவ விரும்புவோருக்கு முகவரி: Dr. Dathu Rao Memorial Charitable Trust (Regd.) 15, முதல் மெயின் ரோடு, காந்தி நகர், சென்னை—20.

சென்னை—20. பிரசாத், நிர்வாக அறங்காவலர்.

(தலைப்பு பற்றிய விளக்கம் அக்கட்டுரையின் இறுதியிலேயே பிரசுரிக்கப்பட்டுள்ளது. கட்டுரையில் அரசு தாமதங்களைத் தவிர்க்க வேண்டியதன் அவசியம்தான் வலியுறுத்தப்பட்டுள்ளது.

— ஆசிரியர்.)

**உமக்குத் தெரியுமா?**

* மக்களின் கோடிக்கணக்கான வரிப் பணத்தை அழிக்கும் வகையில் ஆடம்பரமான திட்டங்களை அறிவித்துப் பாமர மக்களை ஏமாற்றி வரும் தமிழக அரசுக்குத் தலையங்கம் மூலம் பயனுள்ள சில அறிவுரைகளைக் கூறியிருந்தீர்கள்! ஆனால் இவையெல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்குக்குச் சமம் என்பது உமக்குத் தெரியுமா?

கும்பகோணம்—1. பா. கிருஷ்ணதாஸ்.

**அது ஒன்றும் புதுமையல்ல!**

* 'ஒரு கல்லூரி நிர்வாகத்தின் அடக்கு முறை' படித்தேன். அதிர்ச்சியுற்றேன். கல்லூரி ஆசிரியர்கள் சம்பளத்திற்காக ஏங்கும் பரிதாபச் சூழ்நிலை அக்கல்லூரியில் நான் படிக்கின்ற காலத்திலேயிருந்தே தொடர்கிறது. முதல் தேதியில் சம்பளம் என்ற சம்பவம் இது வரையில் இல்லாத ஒன்று. இதிலே ஏதும் புதுமையில்லை. இலட்சம் இலட்சமாய் வருமானம் வரும் பெருமை வாய்ந்தமயிலம் முருகன் கோயில் நிர்வாகம்—இலட்சியவாதிகளான பேராசிரியர்களையும், முதல்வரையும் அலட்சியப்படுத்துவதும் நல்லதல்ல. இனியாவது ஒன்றுபட்டு, அனைவரும் ஒரே அணியில் நின்று இறைத் தமிழை வாடவிடாமல் வாழவிட வழி செய்ய வேண்டும் என்று 'கல்கி' வாசகன் என்ற முறையிலும் அக்கல்லூரியின் பழைய மாணவன் என்ற முறையிலேயும் பணிவன்புடன் வேண்டுகின்றேன்.

மரக்காணம், கு. கார்த்திகேயன், பி.லிட், பி.எட்.
செயலர், தமிழ் வளர்ச்சி மன்றம்.

**உமது நிருபர் யாரய்யா?**

* வெளிநாட்டு ஆசாமிகளையெல்லாம் உங்கள் பத்திரிகை நிருபர்களாக வைத்திருப்பீர்கள் போலிருக்கிறதே! என்னவோ பெரிதாய், 'சேலத்தைச் சுற்றினோம்; சோர்ந்து திரும்பினோம்' என்று கட்டுரை எழுதி விட்டார். சேலம் மட்டுமல்ல, தமிழ்நாட்டின் எல்லா நகரங்களும் 'உனக்கு நான் உசத்தி' என்கின்ற மாதிரி ஒன்றுக்கொன்று நிர்வாகச் சீரழிவிற்கு உட்பட்டு, கேட்பாரற்றுத்தான் கிடக்கின்றன என்பதையும் தெரிந்து கொள்ளும்.

அந்தியூர். மு. தவசியப்பன்.

**சரியான சாட்டையடி!**

* 'அவள் விஷயம் தெரிஞ்ச கொடுக்கு' கதையின் மூலம் கதாசிரியர் தமிழினியன், இன்றைய இளைஞர்களின், 'கூழுக்கும் ஆசை; மீசைக்கும் ஆசை' எண்ணத்திற்குச் சரியான சாட்டையடி கொடுத்துவிட்டார்.

திருச்சி—18. ராஜிராதா.

**நிறையப் ப்டியுங்கள்!**

* 'ஒரு வழக்கு ஆறு மொழிகள்' — நுணுக்கு முன்பே ஒரு வாரப்பத்திரிகையில் வந்து நாங்களெல்லாம் படித்துவிட்டோம். இருந்தும் நீங்கள் ஏன் இரண்டாவது தடவையாகப் பிரசுரித்தீர்களோ தெரியவில்லை. தயவு செய்து நீங்கள் மற்ற பத்திரிகைகளையும் படியுங்கள்.

கொப்பம்பட்டி. அன்பு மதியழகன்.

# எங்கள் ஊர் எம்.எல்.ஏ.

**மலர்வண்ணன்**

சர்ர்ர் என்ற பிரேக் சத்தத்தோடு சைக்கிள்களை நிறுத்திவிட்டு, ஓர் ஆக்ரோஷமான பார்வையோடு அந்த நான்கு இளைஞர்களும் எம்.எல்.ஏ.வின் வீட்டுக்குள் வேகமாக நுழைந்தபோது —

எம்.எல்.ஏ. சச்சிதானந்தம் சாந்தமான பார்வையில் வரவேற்றார்.

உயரமாய் ஒரே மாதிரி இருந்த நான்கு பேரும், கண்களைச் சிவப்பாய் வைத்திருந்தார்கள். மூக்கு நுனியில் எக்கச்சக்கமாய்க் கோபம் குடியிருக்க, மேல் பல்லால் கீழ் உதட்டைக் கடித்துக் கொண்டு நின்றார்கள்.

வீட்டின் முன்புறம் குரோமியம் பிளேட்டிங் அலுமினிய கார்டன் நாற்காலியில் உட்கார்ந்திருந்த சச்சிதானந்தம், ''வாங்க உட்காருங்க!'' என்றார்.

இளைஞர்கள் நான்கு பேரும் ஒரு கணம் மருண்டு, ஒருவரை ஒருவர் பார்வையால் ஊடுருவி நிற்கையில் —

''என்ன வேணும் உங்களுக்கு? நீங்கள் யார்?'' என்றார் எம்.எல்.ஏ.

மருட்சியும் சலனமும் ஒரு நிமிஷ நேரம் தான். சட்டென்று சமாளித்துக் கொண்டார்கள். ஓர் இளைஞன் சற்றே முன்வந்து,

''நாங்கள் இந்த ஊரைச் சேர்ந்தவர்கள். அதாவது உங்கள் தொகுதியைச் சேர்ந்தவர்கள். உங்களிடம் சில கேள்விகள் கேட்பதற்காக வந்திருக்கோம்'' என்றான் நாடக பாணியில்.

அவன் குரலில் கடுமை ஏராளமாய்ப் பரவிக் கிடக்க, உதடுகளுக்கு மத்தியில் அலட்சியச் சிரிப்பு ஒளிந்திருந்தது.

எம்.எல்.ஏ. சச்சிதானந்தத்துக்கு என்ன பதில் சொல்வது என்றே புரியவில்லை. திகைப்பு அடங்கக் கொஞ்சம் நேரம் ஆயிற்று.

இளைஞர்கள் நான்கு பேரும் தீவிரமான பார்வையோடு, இவரையே பார்க்க, எம்.எல்.ஏ. அவர்களுடைய பார்வையைத் தவிர்க்கவே முயற்சி செய்தார்.

முடியவில்லை.

கண்கள் அவரையும் அறியாமல், அந்த இளைஞர்களின் கண்களையே ஓடி ஓடிக் கவ்விக் கொண்டன.

மெதுவாய் முகத்தைத் துடைத்தவாறே, மெல்லிய குரலில், ''கேளுங்கள்'' என்றார்.

என்ன கேட்கப் போகிறார்கள் என்று அவருக்குத் தெரியாதா என்ன? தொகுதியில் எத்தனை பிரச்னை?

சச்சிதானந்தம் எந்தக் கட்சியையும் சாராதவர். சுயேட்சையாக நின்று ஜெயித்தவர். நாம் எப்படி ஜெயித்தோம் என்று அவருக்கே இந்த நிமிஷம் வரை புரியவில்லை.

ஆளும் கட்சியும் இல்லாமல் எதிர்க் கட்சியும் இல்லாமல் அவரால் எதுவுமே செய்ய முடியவில்லை.

இதை நினைத்து அவர் வருந்தாத நாளே கிடையாது.....

''நம்ம தொகுதியில் எத்தனை பிரச்னைகள்னு உங்களுக்குத் தெரியும். இல்லையா?''

''ம்.''

''நீங்கள் எங்கள் எம்.எல்.ஏ.'' என்று கேலியாகக் கூறிவிட்டு, விரக்தியோடு சிரித்தான் ஓர் இளைஞன்.

''............''

''வேறு எங்கேயும் இல்லாத பிரச்னைகள் இங்கே இருக்கு. நீங்க என்ன செய்யறீங்க என்று கேட்டுட்டுப் போக வந்தோம்'' என்றவாறே இன்னொருவன் அவருக்குப் பக்கத்தில் நெருங்கி நின்றான்.

சச்சிதானந்தத்தின் மனத்திற்குள் பெரிதாய் ஒரு போராட்டமே நடைபெற, மெல்லிய குரலில் கேட்டார்:

''ஆமாம், நீங்கள் எல்லாம் யார்னு நான் தெரிஞ்சுக்கலாமா?''

''ஏன்? உங்களை மிரட்டினதாகப் போலீஸில் புகார் தரப் போறீங்களா?''

சச்சிதானந்தத்திற்கு அந்த நிலையிலும் சிரிக்கலாம் போல் இருந்தது. ஆனால், ஏனோ தெரியவில்லை. சிரிப்பு வர மறுத்தது.

''இல்லே சும்மா தெரிஞ்சுக்கத்தான் கேட்டேன்.''

''எங்களுக்கு வெறும் பெயர்கள் மட்டுமே உண்டு. மற்றபடி சொல்லிக் கொள்கிற மாதிரி, தொழிலோ, முகவரியோ கிடையாது. ஆனால் படிச்சிருக்கோம்!''

எம்.எல்.ஏ. ஒரு கணம் யோசித்துவிட்டு,

''நீங்க, பொதுப் பிரச்னையைப் பற்றித் தானே, பேச வந்தீங்க?'' என்று கேட்டார்.

''ஆமாம்.''

''வேலை வெட்டி எதுவும் இல்லாத நீங்க, உங்களுக்கு, ஏதாவது வேலைக்குச் சிபாரிசு செய்யும்படி கேட்காமல், ஊருக்காகப் பேச வந்திருக்கீங்க இல்லையா?''

''............''

''உங்களுக்கே இத்தனை அக்கறை இருக்கிறப்போ, உங்க எம்.எல்.ஏ. தான் அக்கறை இல்லாமல் இருப்பேனு?''

''சாமர்த்தியமாகப் பேசி, ஆளை மயக்கறதே, இந்த நாட்டில் தொழிலாகப் போச்சு. நாட்டைப் பிடிச்ச பெரிய வியாதி இது. எங்களுக்கு அழகான அடுக்கு மொழிகளோ, புத்திசாலித்தனமான சால்ஜாப்பு வார்த்தைகளோ தேவையில்லே. காரியம் நடக்கலியே, அதுக்குக் காரணம் தெரியணும். காரணங்களை உடைச்சு எறிஞ்சு காரியங்கள் நடக்கணும்.''

''என்றல் ஆனதைச் செய்துக்கிட்டுத் தான் இருக்கேன்.''

''என்னத்தைச் செய்யறீங்க?'' என்றவாறே முன்னடி வந்த இளைஞனின் தோள்களை அழுத்திப் பிடித்து இழுத்தான் இன்னொருவன்.

''எம்.எல்.ஏ. சார். நம்ம தொகுதியை நீங்க சுத்திப் பார்த்திருக்கீங்களோ என்னவோ எனக்குத் தெரியாது. ஆனல் இப்போது நாம் எல்லோருமே போதலாமா? எங்களோட வர மறுக்க மாட்டீங்கன்னு நினைக்கிறேன்.''

சட்டென்று எழுந்தார் எம்.எல்.ஏ. ''எனக்கு என்ன மறுப்பு? நான் வருகிறேன்!''

வேகமாய் எழுந்த எம்.எல்.ஏ. ஒரு கணம் தயங்க,

''நடந்தே போகலாம் சார். ஏன் என்றல் இப்போ நாம் போகிற வழியில் சைக்கிள் கூடப்போகமுடியாது'' என்றார்ஓர் இளைஞன்.

''சரி!''

மறுகணம் ஐந்து பேரும் நடக்க ஆரம்பித்தனர்.

அந்த நகரின் குறுக்குச் சாலையொன்றின் வழியாக மெயின் ரோடை அடைந்தபோது,



நடப்பதற்கே சிரமமாய் இருந்தது.

சாக்கடைக் குழாய்களைப் புதைப்பதற்காக, மெயின் ரோடில் பெரிய பெரிய பள்ளங்கள். அவற்றில் இருந்து எடுத்து இரண்டு புறமும் கொட்டிய மண் மேடுகள். ரோடில் ஏறத்தாழ மூன்றில் இரண்டு பகுதி அழிந்து கிடந்தது.

குழி வெட்டிப் பல நாட்கள் ஆகியும், கவனிப்பார் இல்லாமல் போகவே, வெட்டப்பட்ட குழிகளின் ஓரங்கள் சரிந்து, சில இடங்களில் லேசாய் வெடித்து வாயைப் பிளந்து கொண்டிருந்தது.

வீடு, கடை ஓரமாக இருந்த மண் மேட்டில் பெரிய பெரிய குழாய்கள் கிடைக்க, நடு ரோடில் இருந்த மண் மேட்டில் மக்கள் நடந்து கொண்டிருந்தார்கள்.

மீதம் இருந்த ரோடு, தொண்ணூறு வயசுக் கிழவியின் முகம் மாதிரி மேடு பள்ளங்களாய்ப் பல் இளித்தது....

எம்.எல்.ஏ. பெருமூச்சு விட்டார்.

ஏதேதோ சில்லறைப் பிரச்னைகளால் அங்கே வேலை பாதியிலேயே கைவிடப்பட்டு, ஒரு வருஷத்துக்கு மேல் ஓடிவிட்டது.

எதிரே வந்த இரண்டொருவர் எம்.எல்.ஏ. வைக் கும்பிட, சிலர் உஷ்ணமாக முறைக்க, இவர் தலை குனிந்தார்.

தடுமாறி நடந்து அடுத்த தெருவுக்கு வந்தபோது, அங்கே சிறுசிறு குழாய்கள் குவிந்திருக்க, அதற்கேற்ற மாதிரி சிறுசிறு பள்ளங்கள் வெட்டப்பட்டிருந்தன. குன்று போல், பக்கங்களில் மண் மேடுகள்.

குடிநீர் வசதியாம். ஆறு மாசமாய் இப்படி இருக்கிறது.

மெயின் ரோடு வழியாக வந்த பஸ்கள் ஆறு மாதம் இந்த வழியாய் வந்தன. இதுவும் இப்படி ஆனபின் பஸ்களே வருவதில்லை.

நடப்பதற்கே வழியில்லை. பஸ்ஸாவது, ஸ்கூட்டராவது?

எம்.எல்.ஏ.வும் நான்கு இளைஞர்களும், ஊருக்கு வெளியே வந்தபோது, ஆற்றுப் பாலம் ஒன்று அரைகுறையாய் இடிந்து, பயமுறுத்தியது.

அதைப் பயன்படுத்தவே பயந்த மக்கள் ஆற்றுக்குள் இறங்கி நடந்தனர். இப்போது முழங்கால் தண்ணீர்தான். ஆனால் போன மாதம் பெய்த மழையில் ஏராளமான தண்ணீர் வந்தபோது, பரிசலில்தான் போனார்கள்.

பாலத்தை ரிப்பேர் பண்ண யார் நினைத்தார்கள்?

"அங்கே பாருங்கள்!"

ஓர் இளைஞன் சுட்டிக்காட்டிய பக்கமாய்த் திரும்பினார் எம்.எல்.ஏ. ஒரு ரேஷன் கடையும், அதற்கு முன்னால் ஏராளமான கூட்டமும்....

"இந்தக் கடையில் மொத்தம் நாலாயிரம் கார்டுகள் பதிவாகியிருக்கு. இன்னொரு கடை திறக்கும்படி, பல முறை சொல்லியாச்சு."

"............"

ஏறத்தாழ ஊருக்கு வெளிப்புறமாய் வந்துவிட்ட எம்.எல்.ஏ.வும், நான்கு இளைஞர்களும் திரும்பி நடந்தபோது.....

சட்டென்று மின் விளக்குகள் அணைந்து, ஊரே இருளில் மூழ்கியது.

"பவர் கட்!"

"இப்போ மணி ஏழு கூட ஆகலே. இப்பவே போயாச்சு. இனி நாளைக்கு மத்தியானம் பதினொரு மணிக்குத்தான் வரும்."

"............"

அடுத்த கணம் கடைகளிலும், வீடுகளிலும் மெழுகுவர்த்திகள் முளைக்க, 'வீல்' என்ற பெண்ணின் அலறல் ஒன்று ஓங்காரமாய்க் கேட்டது.

எம்.எல்.ஏ. திடுக்கிட,

"ஒன்றும் இல்லை சார். நடந்து கொண்டிருந்த யாரோ குழியில் விழுந்துட்டாங்க. இது ரொம்பச் சாதாரணம். இருட்டு பாருங்க!"

இளைஞர்கள் பேசிய ஒவ்வொரு பேச்சிலும் நையாண்டி இருந்ததை எம்.எல்.ஏ. கவனிக்காமல் இல்லை.

எல்லோரும் அவர் வீட்டுக்கே திரும்பிய பின்....

"இப்போ என்ன செய்யப் போறதா உத்தேசம் சார்?" என்றான் ஒருவன்.

"............"

"பேசாமல் இருந்தால் எப்படி?"

எம்.எல்.ஏ. சட்டென்று நிமிர்ந்தார். கண்களில் பளிச்சென்று பிரகாசம் தெரிய, தீர்மானமாகப் பேசினார்.

"வழி கண்டு பிடிச்சுட்டேன். இன்னும் சரியா ஆறே மாசம். அப்புறம் பாருங்கள். இது தேவ லோகம் ஆயிடும்!"

அழுத்தமாகச் சொன்ன எம்.எல்.ஏ. இவர்களின் பதிலுக்காகக் கூடக் காத்திராமல் வீட்டுக்குள் நுழைந்து கொண்டார்.

மறு நாள்.

பொழுது விடிந்தபோது, அந்தக் கொடிய செய்தி ஊரையே அலற வைத்தது. எங்கும் அதே பேச்சு.

எம்.எல்.ஏ.வின் வீட்டை நோக்கி எல்லோரும் ஓட.....

வீட்டுக்குள் ஃபேனில் கயிறு கட்டி, எம்.எல்.ஏ. தொங்கிக் கொண்டிருந்தார்.

"நம்ம எம்.எல்.ஏ. தற்கொலை செய்துக்கிட்டாராம்!"

"அடப் பாவமே!"

முதல் நாள் மாலை எம்.எல்.ஏ.வைச் சந்தித்த நான்கு இளைஞர்களும், அவருடைய தற்கொலைச் செய்தியைக் கேள்விப்பட்டதும், ரொம்பவும் வியர்த்து, ஓடி வந்தபோது....

டி. எஸ். பி. சிவராஜ், எம்.எல்.ஏ.வின்



மத்தியப் பிரதேசத்தில் 'ஆசிரியர் பற்றுக்குறை'' காரணமாக ஓர் ஆசிரியர் மட்டுமே இருந்து பாடம் சொல்லிக் கொடுக்கும் பள்ளிக்கூடங்கள் அதிகமாக உள்ளன.

இப்படி உள்ள பள்ளிக்கூடங்கள் நூறு.... ஐநூறு... ஆயிரம் என்று இல்லை. பதினான்காயிரம் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன.

— கமுதி திராவிடமணி.

வீட்டுக்குள் இருந்து வெளியே வந்து கொண்டிருந்தார். வாசலில் ஏராளமான கூட்டம்.

இளைஞர்கள் கவனிக்க, டி.எஸ்.பி. தொண்டையைக் கனைத்துக் கொண்டு பேசினார்.

''நமது எம்.எல்.ஏ. உங்க முன்னாடி படிக்க, ஒரு லெட்டர் எழுதியிருக்கிறார். படிக்கிறேன். அமைதியாகக் கேளுங்கள்.''

லேசாய் இருந்த விம்மல் வெடிப்புகளும் நீங்கிப் போக, அந்த மயமான அமைதியில் டி.எஸ்.பி. படித்தார்:

''என் அன்புக்குரிய தொகுதிப் பெரு மக்களே, வணக்கம்.

''இன்று மாலை நான்கு இளைஞர்கள் என்னைச் சந்தித்து, நமது தொகுதியைச் சுற்றிக் காட்டி, அவல நிலையை விளக்கினார்கள். இதற்கு உங்கள் நடவடிக்கை என்ன என்று கேட்டார்கள்.

''இந்தத் தொகுதி எம்.எல்.ஏ. என்கின்ற முறையில் எவ்வளவோ முயற்சி செய்தும் எதுவும் முடியவில்லை.

''இன்று யோசிக்கும்போது, ஒரு வழி புலப்பட்டது.

''இருந்து செய்ய முடியாத காரியங்களை ஒரு எம்.எல்.ஏ. இறந்து செய்ய முடியும் என்று புரிந்து கொண்டேன்.

''நிஜம்தானே, நான் இறந்துவிட்டால் ஆறு மாதத்தில் இங்கே ஓர் இடைத் தேர்தல் நடக்கும். எல்லோருடைய கவனமும் இங்கே இருக்கும். ஆளும் கட்சி எதுவாக இருந்தாலும், அதனுடைய கவனம் இங்கே பட்டால், இந்தப் பிரச்னைகள் தீர்ந்து போகாதோ?

''இதற்குத் தற்கொலை செய்வானேன், ராஜினாமா போதாதா என்கிறீர்களா? போதாது. நான் ராஜினாமா செய்தால், அது ஒரு சமுதாயப் பிரச்னையாக மாறாது. சில சிந்தனைகள் உதிக்காது. அதனால்தான்.

''இன்னொன்று —

''நமது தொகுதிக்கு நல்லது நடக்க வேண்டுமானால் நம்ம ஊர் எம்.எல்.ஏ. சாக வேண்டும் என்று யாரும் நினைத்துவிடக் கூடாது.

''இன்னொன்று —

''இந்த எம்.எல்.ஏ.வைக் கொன்று தள்ளி விட்டால் வரும் இடைத் தேர்தலால் நம் தொகுதிப் பிரச்னைகள் தீரும் என்று, ரத்தத்துடிப்புள்ள இளைஞர்கள் தடம்புரண்டு விடக் கூடாது.

''எனவேதான் நான் இப்படி முந்திக் கொண்டேன்.

''உங்கள் எம்.எல்.ஏ. என்ற முறையில் உயிரோடு இருந்து சாதிக்க முடியாததை இறந்து சாதிக்கிறேன். எப்படியோ சாதனைகள் நடந்தால் சரி, பிரச்னைகள் முடிந்தால் சரி.

''உங்கள் எல்லோருக்கும் நன்றி. போகிறேன். வணக்கம்....

டி.எஸ்.பி. கடிதத்தை மடிக்க ஆரம்பித்த போது, கூட்டம் பலமாய் விம்ம, அந்த நான்கு இளைஞர்களும் சிலையாய்ச் சமைந்து போனார்கள்.



## சென்ஸார் தேவை இல்லையா?

## வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்

**போட்டி: 40**

படாதிபதிகளுக்கும் சென்ஸாருக்கும் இடையே மறுபடி லடாய்! தணிக்கையாளர்கள் படாதிபதிகளைக் கொடுமைப்படுத்துகிறார்கள் என்றும் திரைப்படத் தணிக்கையையே ஒழித்துக் கட்டி விட வேண்டும் என்றும் முக்தா சீனிவாசன் (படம்) தலைமையில் படாதிபதிகள் கருத்துத் தெரிவித்துள்ளனர், திரைப்பட விழாவிலே. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? படாதிபதிகள் கூறுவதுதான் சரியா? அல்லது, வேறு பலர் என்னுவது போல் தணிக்கைக் குழு தாராள மனப்பான்மையுடன் நடந்துகொண்டு அதன் மூலம் சினிமாவானது மக்களைக் கெடுக்கத் துணை போகிறதா? கீழே வெற்றிடத்தில் ரசமான முறையில் எழுதி அனுப்பப்படும் கருத்துக்கள் பிரசுரமாகிப் பரிசு பெறும். தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்கு வி. ஐ. பி. ஸூட்கேஸ் பரிசு. உறையின்மேல், 'சென்ஸார் தேவையில்லையா?' என்று அவசியம் குறிப்பிடவும். இந்த அரைப் பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்பவும்.

**முடிவு தேதி: 17.2.86.**

**இன்னும் 13 ஸூட்கேஸ்களே பாக்கி. அவற்றுள் ஒன்று நிச்சயம் நமக்குத்தான் என்ற உறுதியோடு வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறுங்கள்.**

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

சென்னையில்: பிரதி இங்கிலீஷ் மாதம் 1 — 2 — 9 to 11, 16 to 19 தேதிகளில்

நியூ உட்லண்ட்ஸ் (எட்வர்ட் எலியட்ஸ் ரோடு),

Dr. ராதாகிருஷ்ணன் ரோடு, போன்: 473111.

காலை 10 to 12 வரை. * மாலை 3 to 6 மணி வரை.

# தங்க பஸ்பம் சிட்டுக்குருவி லேகியம்



சிறப்பானது, கை, கால், அதிக தளர்ச்சி, வெட்கம், பயம், ரத்தக் குறைவு, கெட்டக் கனவுகள், நீங்கிப் புதிய சக்தி, புத்துணர்ச்சி தந்து வாழ்க்கையில் இணையில்லா வெற்றி தருகிறது. 60 வேளை விலை ரூ. 120. 90 வேளை ரூ. 180. 120 வேளை ரூ. 240. வி. பி. பி. யில் பெற எழுதுங்கள். ஏராளமான நற்சாட்சிகள் பெற்றது. சித்த வைத்திய சிகிச்சையில் பழனியே முதல் இடம் பெற்றது! பழனியில் பிரதிமாதம் 5 முதல் 8, 13 முதல் 15, 21 முதல் 31. நேரில் சந்தித்து ஆலோசனையும் சிகிச்சையும் பெறலாம்.

**Dr. S.K**

**லயன் Dr. S. காளிமுத்து** R.M.P. (IND) V.V.C.A.M.I.H.

**பழனி சித்தர் வைத்தியசாலை, (REGD) பழனி-1.** போன்: 316-316 ஏ, 630 - 420. தந்தி: சித்தர்.

---

# தபால் மூலம் சித்திரக்கலை !



படம் வரைய,
வர்ணம் தீட்ட வேண்டுமா ?



28 வருடங்களுக்கும் மேலாக, தங்கள் நம்பிக்கைக்கும், திறமைக்கும் பெயர் பெற்ற

**சந்தனுவின்**
**சித்திர வித்யாலயத்தின்** மூலம்

தபால் மூலம், தமிழ், ஆங்கிலம், மலையாளம், தெலுங்கு, ஹிந்தி ஆகிய 5 மொழிகளில் வீட்டிலிருந்தபடியே தங்களின் சித்திர ஈடுபாட்டையும், திறமையையும் பயனுள்ள முறையில் முன்னேற்றிக் கொள்ளலாம்.

முழு விவரங்களுக்கு 90 பைசா தபால் தலைகளுடன் விண்ணப்பிக்கவும்

**சந்தனுவின் சித்திர வித்யாலயம்**
C/o சித்திரக் கூடம், KD, சிந்தாதிரிப்பேட்டை,
சென்னை-600 002 போன்: 846188




Modern SCV Tel 30



# கரிமேடு கருவாயன்

நறுக்கென்று கிள்ளிக் கொள்ளுங்கள். வலிக்கிறது, இல்லே?' கனவில்லே, நிஜம்தான்!

தன்னுடைய பாணியை முற்றிலும் மாற்றிக் கொண்டு, சுவாரஸ்ய மான படத்தைத் தந்திருப்பவர், அட, இராம. நாராயணன்.

நியாயத்திற்குக் கட்டுப்பட்ட (விஜய்காந்த்) கிராமப் பிரஜை முத்து. தன் தங்கையின் கையைப் பிடித்திழுத்தவனைப் பஞ்சாயத்துக்கு இழுத்து நியாயம் கிடைத்துவிட்டதாய்ச் சந்தோஷப்படுகிறார். சந் தோஷத்திற்கு அல்பாயுசு. பஞ்சாயத்துத் தலைவரும், அவருடைய நான்கு சகோதரர்களும் அந்தத் தங்கையை மாஸ் ரேப் செய்து, தூக்கில் தொங்க விட, சாது முத்து ஆவேச முரடனாய்க் கிளம்பி இரண்டு சகோதரர்களை அந்த ராத்திரியிலேயே தீர்த்துவிட்டு, மற்ற மூவரையும் பழி வாங்கக் காட்டுக்குள்ளே பதுங்கியிருக்க.....

முத்து கரிமேடு கருவாயனாய் அவதாரமாகிறார்.

போலீஸ் உடுப்பை மாட்டிக் கொண்டு, வாய்க்கு வாய், 'என்னப் பனே, முருகா' என்று பக்தி சொட்டும் வினு சக்ரவர்த்தி, வித்தியாச மானவர். அந்த 'முருகா' வீக்னஸைப் புரிந்து கொண்டு அவர் சீறும் நேரம், அதைப் பிரயோகித்து ஆளாளுக்கு டபாய்க்கும் சாமர்த் தியம் ஜோர். கருவாயன் உண்டி வில்லால் ஒருமுறை அடித்ததில் அவர் இரண்டு கண்களையும் எப்படி இழந்தார் என்பது பெரிய மர்மமாயிருந்தாலும், தனக்கு உதவி செய்யும் கருவாயனை காட்டிக் கொடுக்க மறுத்துவிடும் காட்சிகள் நயம்.

பெண் பார்க்க வந்தவர்களிடம், கருவாயன் தன்னைக் கெடுத்து விட்டதாய்ச் சொல்லி நளினி அந்த சம்பந்தத்தைக் கெடுத்துவிட, ராத்திரி ஓட்டைப் பிய்த்துக் கொண்டு இறங்கி விஜய்காந்த் பொய் சொன்னதற்காக விடும் பளார், பொறி பறக்கும் காட்சி.

கருவாயனைக் காட்டிக் கொடுக்க மறுத்து நாவையே அறுத்துக் கொள்ளும் பையன் நெகிழ்வு.

அத்தனை பேரும் நன்றாய்ப் பண்ணியிருப்பதே சிறப்பு.

— ஜெயமன்மதன்.



# 13

அன்று காலை, தெருப்பக்கம் காலாற இறங்கி நடக்க முயன்ற சுவாமிநாதன் எதிரில், ஒரு வாலிபன் அவசரமாக ஓடிக்கொண்டிருப்பதைக் கண்ணுற்றார். அலுவலகத்திற்கு நேரம் ஆகிவிட்டது போலும். இரவெல்லாம் ஐந்து நட்சத்திர ஓட்டலில் தோழர்களுடன் பேசிச் சாப்பிட்டுக் களித்திருப்பான். பாவம்! பொழுது விடிந்தது கூடத் தெரியாமல் தூங்கி இருப்பான். இப்போது, அவதிப்படுகிறான்.'

வாலிபன் கையிலிருந்த ப்ரீஃப் கேஸை ஆட்டியபடி, எதிரே நின்ற ஆட்டோவினுள் பாய்ந்து பறந்தான். இளவயசு, வேகம்... தமக்குள்ளே சிரித்தபடி மேலே நடந்தவர் மனத்தில் சட்டெனக் கேசவனின் நினைப்பு தலைதூக்கியது.

அன்று, கேசவனுடன் வீடு திரும்பியவர் முன் அறையிலேயே அமர்ந்து கொண்டார். அவனது முகத்தில் சஞ்சலம் நிறைந்திருப்பதைப் புரிந்து கொண்டவராய், ''ஏதேனும் உதவி தேவைன்னா சொல்லுப்பா. என்னாலானதைச் செய்கிறேன்.. இல்லை, குறைந்த பட்சம் உபதேசமாவது செய்ய முடியும் எனக்கு'' என்றார் கனிவுடன்.

''ஸார்!'' மென்று விழுங்கியபடி ஆரம்பித்தவன் கண்களில் கவலை தோய்ந்திருந்தது.

''பயப்படாமல் சொல்லுப்பா. எதற்காகத் தயங்கறே. இப்போதைக்கு, இந்த இடத்தில் நாம் இரண்டு பேர்தான் இருக்கிறோம். என் மனைவி சாதாரணமாகவே என் விஷயத்தில் தலையிட மாட்டாள். அதிலேயும், இப்ப அவளால் எழுந்து சட்டென்று வரவும் முடியாது என்று கேசவனுக்கு தைரியம் கூறியவராய், ''காப்பி சாப்பிடுகிறாயா?'' என்றும் உபசரித்தார்.

''வேண்டாம். இப்பொழுதுதான் சாப்

பிட்டுவிட்டு வருகிறேன்'' என்ற கேசவன், சிறிதுநேரம் தரையையே வெறித்தான். பிறகு, சுவாமிநாதனைப் பார்த்துவிட்டு, ''எப்படி ஆரம்பிக்கறதுன்னே தெரியலீங்க. அன்றைக்கு நீங்க என்னைப் பார்த்ததும் ஆச்சரியப்பட்டிருப்பீங்க இல்லையா?''

சுவாமிநாதன் மௌனம் சாதித்தார்.

''என்னடா இது? இத்தனை சின்னக் கடை வச்சிருக்கான். இவனிடம் கத்தை, கத்தையாப் பணம் இருக்குதே. எப்படின்னு யோசிச்சிருப்பீங்க. உங்ககிட்டே உண்மையைச் சொல்லிடறேன் ஸார். என் அப்பாவைக் காப்பாற்ற அன்றைக்கு உதவினீங்க. அவர் போய்விட்டார். என் அம்மா, கூடப் பிறந்தவங்க என்று யாரும் இல்லாத அனாதையாக இப்பொழுது இருக்கிறேன். உங்களைப் பார்த்த போது எங்கப்பாவே வந்துவிட்டது போல் ஓர் உணர்வு மனசை நெருடிச்சு. அதனால தான் அப்படியே பணத்தைக் கொடுத்தேன். ஆனால், அத்தனையும் நேர்வழியில் சம்பாதிச்ச பணம் இல்லே...'' குரல் கம்மியது அவனுக்கு.

சுவாமிநாதன் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். ''எனக்குத் தெரியும். அது தான் பணத்தை எப்படியோ புரட்டிக் கொண்டு வந்து திருப்பிவிட்டேன்.''

''உண்மைதான். நீங்க நேர்வழியில் நடக்கிற நாணயமான மனிதர். அதனால்தான் என் பணத்தைத் தொட்டு விட்டோமேன்னு மனம் கூசிப் போய் அதை உடனடியாகத் திருப்பி விட்டீங்க என்று புரிந்து கொண்டேன்.''

''இப்பொழுது எதற்கு வந்தே? அதைச் சொல்லு'' சுவாமிநாதன் சிறிது அதட்டலாகக் கேட்டார்.

''இப்படி என்னை ஆரம்பத்திலேயே யாராவது கேட்டிருந்தால் ஒரு சமயம் நான் நல்ல முறையிலேயே வாழ்க்கையை அமைத்துக் கொண்டிருந்திருப்பேன். பம்பாயிலேயே சில பேரோட பழக்கம் ஏற்பட்டதன் விளைவு. குறுக்கே புகுந்து பணம் சம்பாதிக்கிற வெறி என்னைப் பிடிச்சுக் கொண்டு ஆட்டியது.''

''குறுக்காகப் பணம் பண்றதுன்னு உன் புத்திக்கே பட்டுது இல்லையா? அப்பொழுதே அந்த வழி நல்லது இல்லேன்னு விட்டிருக்கலாமே.''

**லக்ஷ்மி**

கேசவன் கூனிக் குறுகியபடி அமர்ந்திருந்தான். ஆரம்பநாட்களில் ஒருவேளை சாப்பாட்டிற்குக் கூட வழியின்றி, பம்பாய் வீதிகளில் அவன் அலைந்த கொடுமையைப் பற்றி அவரிடம் முறையிட்டான்.

ஒரு நகைக்கடையில் எடுபிடி ஆளாகச் சேர்ந்து அதன் முதலாளியின் நம்பிக்கைக்கு உகந்தவனாக மாறிய சமயம்தான், ராம்லால் இவனது வாழ்வில் புகுந்து குழப்பத்தை ஏற்படுத்தி விட்டிருந்தான்.

''எத்தனை நாளைக்கு இப்படி, நகைக் கடை எடுபிடி ஆளாக இருப்பாய்? நாலு காசைக் கண்ணால் பார்க்க வேண்டாமா? வாழ்க்கையை அனுபவிக்க வேண்டாமா?'' என்று ஆசை காட்டினான்.

''அதெப்படி முடியும்?'' என்று அப்பாவி கேசவன் கேட்டதும் ராம்லால் அவனிடம் சிரித்தபடி கூறினான். ''நான் கொடுப்பதை, குறிப்பிட்ட 'பார்ட்டி'க்குக் கொடு. அதற்காக ஒரு கடையே வைத்துத் தருகிறேன். கமிஷன் கணிசமாகத் தருவேன்.''

டீ. வி., வீடியோ, மற்றும் வெளிநாட்டு எலக்ட்ரானிக் சாதனங்களை, சுங்க இலாகாவின் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டு, ராம்லால் கொண்டு வந்து சேர்த்தான். அவற்றை, ராம்லாலின் வாடிக்கையாளர்கள், கேசவன் மூலமாகப் பெற்றுக் கொண்டு பணம் செலுத்தி விடுவார்கள். கேசவனின் நாணயம், இந்த வியாபாரச் சந்தையில் வெறும் நாணயமாக மாறியது. பணம் கணிசமாகக் கைநிறைய வந்தது என்றாலும், அவ்வப்போது திடீர், திடீர் எனப் போலீஸ் அதிகாரிகள் சோதனை செய்ய வரும் தொல்லைகள், சுங்க இலாகாவின் கெடுபிடி யாவும் கேசவனுக்குத் தீராத வெறுப்பைத் தந்தன. முடிவில், ராம்லாலிடமே தன் இயலாமையைத் தெரிவித்து விலகிக் கொள்ள விரும்பினான்.

''என் வியாபார ரகசியம் முழுவதும் உனக்குத் தெரியும். உன்னை வெளியே விடுவது ஆபத்து'' என்று அவன் மறுத்துவிட்

# சொர்க்கத்தின் எல்லை

டான். கேசவனுக்கு, தப்பித்து ஓடிவிட வேண்டும் என்ற வெறி பிடர் பிடித்து உந்தியது.

ஒருநாள், அகஸ்மாத்தாக, ராம்லால் போலீஸ் வலையில் கையும், களவுமாகச் சிக்கிக் கொண்டான். இரண்டு வருடக் கடுங் காவலும், இதர தண்டனைகளுமாக அவன் சிறையில் இருந்த சமயம், கேசவன் சென்னைக்கு நழுவி வந்துவிட்டான்.

''எப்படியும் ஒழுங்கான மனிதனாக வாழ வேண்டும் என்ற எண்ணம் எனக்கு. அதனால் தான், ஒரு சின்ன நகைக் கடையை வாங்கி, அங்கே உட்கார்ந்தேன், ஸார்'' என்று கேசவன் பெருமூச்சுடன் நிறுத்தினான்.

''மறுபடியும்நகைவியாபாரம்எதுக்கப்பா. பேசாமல் இருக்கறதை வச்சு ஒரு சின்ன மளிகைக் கடை, ஏன்... வெற்றிலே பாக்குக் கடை கூட வச்சிருக்கலாமே. அதில் கிடைக்கிற லாபம் போறும்னு நீ சந்தோஷமா வாழக் கத்துக்கணும். சிறுகக் கட்டிப் பெருக வாழணும்னு தெரிந்து கொண்டாயானால், பிறகு உன் வாழ்க்கையே இனிமையாகத் தெரியுமே. நாம் யாருக்கும் துரோகம் செய்யலே, மோசடி செய்யலே. நல்ல முறையில் வியாபாரம் செய்து சேர்க்கிற பணம்னு, கைநடுங்காம, மனம் கூசாம எடுத்துச் செலவழிக்கலாம் இல்லையா?'' என்று சுவாமிநாதன் அழுத்தமாகக் கூறினார்.

அப்படித்தான் ஸார் வாழலாம்னு நினைச்சேன். ஆனால், என் விதி என்னை விடலே.''

சுவாமிநாதன் விளங்காதவராய்க் கேசவனைப் பார்த்தார்.

''அந்த ராம்லாலின் ஆட்கள் ரெண்டு பேர் என்னை விடாமல் துரத்திக் கொண்டு இங்கேயும் வந்துவிட்டார்கள்!''

அவர் நிமிர்ந்து உட்கார்ந்தார். ''அடக் கஷ்டமே!''

''இப்பொழுது அவர்களோட போதை மருந்து வியாபாரத்தில் நான் உதவணும்னு தொல்லை தராங்க ஸார். ஒரு சின்னப் பெட்டி தான். அதை நாங்க சொல்ற பார்ட்டியிடம் கொடுத்தால் போறும்னு கட்டாயப்படுத்தறாங்க'' — கலவரம் தொனித்தது அவன் குரலில்.

மனித அறிவைக் கெடுத்து மயக்கி, பல இளைஞர்களின் வாழ்வையே குழி பறித்து மூடச் செய்யும், போதை மருந்துகளைப் பற்றி அவர் பல புத்தகங்களில் படித்திருக்கிறார். பத்திரிகைகள் வாயிலாக அவற்றின் கொடுமைகளை அறிந்திருக்கிறார். எத்தனை குடும்பங்கள் இந்தக் கொடிய பழக்கத்தால் சீரழிந்து சின்னா பின்னமாகி இருக்கின்றன என்பதை எண்ணி மனம் குமுறி இருக்கிறார். வளரும் இளைய சமுதாயத்தின் ஆரோக்கியமான ஆணிவேரை, அரித்தெடுக்கும் விஷப் புழுக்கள் இந்தப் போதை வஸ்துக்கள். இளைய சமுதாயத்தின் அறிவைக் கெடுத்து, மயக்கும் இந்த மாய வஸ்துவை ஒழித்துக்கட்ட வேண்டும். அதை மக்களிடம் பழக்கப்படுத்தி, பணம் செய்யும் அரக்கர்கள் பிணம் தின்னும் கழுகுகளைக் காட்டிலும்

கேவலமானவர்கள் என்றுமனம்கொந்தித்துப் போயிருக்கிறார். இப்போது கேசவனும் அந்த அரக்கர் பரம்பரையைச் சேர்ந்தவனா? வெறுப்புடன் அவனைப் பார்த்தார்.

"நான் ஒத்துக்க முடியாதுன்னு சொன்னேன் ஸார். லட்ச லட்சமாப் பணம் கிடைக்கும்னு ஆசை காட்டினாங்க" என்று கேசவன் அரற்றினான்.

"லட்சம் மட்டும் போதுமா கேசவன்? உன்னைப் போல் சின்ன வயதில் லட்சியங்களும் இருக்க வேண்டும். வாழ்க்கையில் சிறந்த லட்சியங்களை எண்ணிப் பாடுபட்டால், நூற்றுக்குப் பத்துப் பங்காவது நிறைவேறும். அதில்லாமல், எல்லோருமே பணத்துக்குப் பின்னால் ஓடிக் கொண்டு, மனச்சாட்சியைப் போட்டு மிதித்துக் கொண்டே போனால், மனுஷ ஜென்மமே இருக்காது. மிருக ஜென்மங்கள்தான் நடமாடும். அப்புறம் ஒருத்தனை ஒருத்தன் அடித்துக் கொண்டு, சாக வேண்டியதுதான்" சிறிது கோபத்துடன் பேசினார் சுவாமிநாதன்.

"நான் முடியவே முடியாதுன்னாலும் அவர்கள் விட மாட்டேங்கிறாங்க ஸார். அவங்க சொன்னபடி கேட்கலேன்னா என்னைக் கொன்னு போட்டுவிடுவேன்னு மிரட்டறாங்க." கேசவன் குரலில் நடுக்கம் தெரிந்தது.

'அடப் பாவிகளா! மனிதன் தான் செய்த தவறுக்காக வருந்தி, திருந்தி வாழ முயன்றால், அவனை வாழ விடாமல் கொலை செய்யவும் தயாராக இருக்கிற மனிதர்களா அவர்கள்?' சுவாமிநாதன் உள்ளத்தில் கசப்பு.

"எனக்கு எப்படி இந்தச் சிக்கலிலே இருந்து வெளியே வருகிறதென்று புரியவில்லை ஸார். நீங்கதான் இதற்கு வழி சொல்ல வேண்டும்" அவன் கெஞ்சினான்.

சுவாமிநாதன் சிறிது நேரம் மௌனம் சாதித்தார். பிறகு மெல்லிய குரலில் நிதானமாகப் பேசினார். "கேசவா! உன்னையறியாமல் பெரிய வலையில் நீ சிக்கிண்டிருக்கே. இதை நீயேதான் அறுத்து எறிந்துவிட்டு வெளியே துணிச்சலோடு வரணும்."

"எப்படின்னு சொல்லுங்க. எனக்கு என்னவோ ரொம்பப் பயமா இருக்கு ஸார்."

"பயப்படாதே. கடவுளை நம்பி, துணிச்சலா செயலிலே இறங்கு. அந்த ராம்லால் ஆட்களைப் பத்தி, ரகசியப் போலீஸ்கிட்ட சொல்லி வை. நீ ஒண்ணும் தெரியாதவனைப் போல அவங்க சொன்ன இடத்துக்குப் பெட்டியோட போறது போலப் போ. போலீஸ்ல நீ 'கையாள்' ஆயிட்டா உனக்கு இதிலிருந்துவிடுதலைகிடைச்சிடும்." என்றார்.

"ஐயையோ! எனக்குக் கோர்ட், கேஸ் இதெல்லாம் தொல்லை பிடிச்ச விஷயம் ஸார். அத்தோட அந்தப் பொல்லாப் பாவிங்க என்னைக் குத்தியே போட்டுடுவாங்க ஸார்." பயத்துடன் கூறினான் கேசவன்.

சிறிதுநேரம் யோசித்தவராய் முன்னும் பின்னும் எழுந்து உலவினார் சுவாமிநாதன்.

பிறகு அவனருகில் வந்து, "இதுக்கு ஒரேவழி தான் இருக்கு" என்றார்.

அவன் ஆவலாக அவரைப் பார்த்தான்.

"நீ ஒரே பிடிவாதமாக என்னால் முடியாதுன்னு மறுத்துவிடு. அந்தக் கூட்டத்தைப் பத்திப் போலீஸுக்கு ஒரு மொட்டைக் கடுதாசி போட்டு வை."

"போலீஸ் நம்புமா ஸார்!" தயங்கினான் கேசவன்.

"நீ உண்மைக்குப் பாடுபட்டால், உண்மை தானாகவே, நியாயத்தைத் தேடிக் கொள்ளும். கவலைப்படாதே" என்றார் அவர்.

"எனக்கு ஆபத்து ஏற்பட்டால்...?"

"கடவுள் இருக்கார். உன்னைக் காப்பாற்றுவார். அதோட ஒண்ணு ஞாபகத்தில் வெச்சுக்கோ. இனிமே ஒழுங்கா ஒரு சின்னத் தொழிலே ஆரம்பிச்சுண்டு, நல்ல பொண்ணாப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொண்டு, குடியும், குடித்தனமுமா இருக்கப் பாரு."

"எனக்கு என்னவோ ரொம்பப் பயமாகவே இருக்கு ஸார்." என்றபடி விடைபெற்ற கேசவனின் முகம் அச்சத்தால் வெளிறிப் போயிருந்தது.

சுவாமிநாதன் மேலே நடந்து போனவர் தமக்குள்ளே சட்டெனக் கவலைகொண்டார்.

"கேசவனுக்கு ஒண்ணும் ஆயிருக்காதே. ஏதோ தைரியம் சொல்லி அனுப்பிட்டேன், பாவம்! சின்னப் பையன். தெரியாத்தனமா துஷ்டர்கள் கிட்ட, சக்ர வியூகத்தில் மாட்டிக் கொண்ட மாதிரி அகப்பட்டுக் கொண்டிருக்கிறான். தப்பிச்சு வெளியே வந்துடுவானா?" மேலே தெரிந்த நீல வானத்தை அண்ணாந்து பார்த்துப் பெருமூச்செறிந்தார்.

(தொடரும்)

ஒருவர்: அந்த மெஸ்ல சாப்பிட்டால் நம்ம வீட்ல சாப்பிடற மாதிரி ஓர் உணர்வு ஏற்படுமாமே, அப்படியா?

மற்றவர்: ஆமாம். நம்ம வீட்ல பொண்டாட்டி, 'நீங்க சம்பாதிக்கிற சம்பாதிப்புக்கு இப்படித்தான் சமைக்க முடியும்'னு திட்டிக்கிட்டே சாப்பாடு போடற மாதிரி, அங்கேயும், 'நீங்க கொடுக்கற பணத்துக்கு இப்படித்தான் சாப்பாடு இருக்கும் இன்னுட்டுப் போய்த் தொலை'ன்னு திட்டிக்கிட்டேதான் சாப்பாடு போடுவாங்க.

டி. ராஜா.





இரண்டு நனைந்த நாட்கள்.

ஹைதராபாத்தில் இதை எழுதும் நேரம், குளிர் எலும்பைத் தொடுகிறது.. ஸ்வெட்டர், ஸாக்ஸ் ஆகியவற்றை எல்லாம் சாப்பிட்டுவிடுகிறது.

இருந்தாலும் திரைவிழா நிகழ்ச்சிகள் கோலாகலமாகவே நடக்கின்றன.

பதிமூன்றும் தேதி மூன்றாவது உலகப் பெண்களின் திரைப்பட விழா தொடங்கியது. மீரா நாயரின் 'இந்திய காபரே' முதல் படமாகத் திரையிடப்பட்டது.

அசோக்குமார் தனிப்பட்ட முறையில் ஒருபத்திரிகையாளர் கூட்டத்தைக்கூட்டினார்.

"நம் மக்கள் இன்னும் நாடகங்களைத்தான் விரும்புகிறார்கள். யாராவது கொஞ்சம் நாடகத்தனமாக நடித்தாலே ஆஹா என்கிறார்கள். நான் அந்த நாடகத்தனத்திலிருந்து விலகியிருக்க முயற்சி செய்கிறேன்.

"முன்பெல்லாம் இந்தியப் படங்களில், இந்தியக் கலாசாரமும், இந்திய உணர்ச்சிகளும் இருக்கும். இப்போது இந்தியக் கலாசாரமும் இல்லை. மேற்கத்திய கலாசாரமும் இல்லை. என்ன செய்வது?"

• — அசோக்குமார் கூறிய சில வார்த்தைகள் இவை.

## திரைவிழாப் படக்கதை — 1

விக்டர் சுற்றும் முற்றும் பார்த்தான். அமைதி. மயான அமைதி. எல்லாருடைய வீடுகளிலும் பூட்டு தொங்கியது. விக்டர் அபார்ட்மெண்டை நெருங்கினான். பூட்டை நெம்பினான். உள்ளே நுழைந்தான். பான்ட் பாக்கெட்டில் அகப்பட்டதைச் சுருட்டித் தள்ளினான். வெளியே ஓடிவந்தான்.

பாலத்திற்குக் கீழே நண்பர்கள் காத்திருந்தார்கள். பக்கத்தில் ஆறு சலசல.

"ஹேய்... இங்க பாரு... என்னல்லாம் திருடிட்டு வந்திருக்கேன்னு..."

"டேய்... சின்னப்பசங்களா... என்னடா பண்றீங்க...?"

"விக்டர்... போலீஸ்... போலீஸ்... ஓடு... ஓடு..."

விக்டர் ஓட ஆரம்பித்தான். கொண்டு வந்திருந்த சில அழுக்கான பான்ட், கோட்களை நதியோட்டத்தில் எறிந்தான்.

பின்னால் திரும்பிப் பார்த்தான். போலீஸ்காரரைக் காணவில்லை.

ஜிக் ஜிக் என்று ரயில் இன்ஜின் கவிதை கலந்து பாடியது. ஓடியது.

ரயில்வே ஸ்டேஷன்!

விக்டர் நின்று மூச்சு வாங்கினான்.

பிளாட்ஃபாரத்தில் அந்தப் பெண் உட்கார்ந்திருந்தாள். பெஞ்சு மீது அவள் அமர்ந்திருந்தது ஒரு குட்டி முயலை, ஒரு மானை, ஒரு புறாவை நினைவுபடுத்தியது. வண்டுக் கண்கள். ரோஜா முகம். ஓவர்கோட்.

அருகில் போனான்.

"உன் பெயர் என்ன?" என்று கேட்டான்.

"அது உனக்கு எதற்கு?"

"சும்மா கேட்டேன்."

"என்னைத் தொந்தரவு பண்ணாதே..."

"வீட்டை விட்டு ஓடி வந்துட்டியா?"

அந்தப் பெண் திடீரென்று கழுத்தில் தொங்கிய விசிலை எடுத்து ஊதினாள்.

"எய்...என்ன இது? எதுக்குப் போலீஸைக் கூப்பிடறே?" என்று கேட்டுவிட்டு விக்டர் ஓடினான். அருகில் இருந்த பார்சல் கோடவுனுக்குள் மறைந்தான்.

தடதடவென்று அந்தப் பக்கமாக ஒரு போலீஸ்காரர் ஓடிவந்தார்.

"எய்... இந்தப் பக்கம் விசில் சத்தம் கேட்டதே... நீயா ஊதினே...?"




# கிளிகளுக்குக் காத்திருக்கும் கூண்டுகள்

''இல்லே....''

''மஞ்சள், சட்டையோட ஒரு பையன் இந்தப் பக்கமா வந்தானு?''

''ஸாரி... நான் பாக்கலே...''

''ஓ. கே. நீ வீட்டுக்குப் போ... சின்னப் பொண்ணுங்க எல்லாம் தனியா இருக்கக் கூடாது...''

போலீஸ்காரர் சுற்றும் முற்றும் பார்த்துக் கொண்டே அகன்ருர். அவள் திரும்பிப் பார்த்தாள். விக்டர் ஒரு விடுபட்ட உணர்வுடன் கை ஆட்டினுன். அருகில் வந்தான்.

''தாங்க்ஸ்... என்னைக் காட்டிக் கொடுக்காம விட்டதுக்கு...''

''நீ வீட்டை விட்டு ஓடிவந்திட்டியா?''

''ஆமா. என் ஃப்ரெண்ட்ஸோட சீட்டாடினேன். தோத்துப் போனு ஒரு அபார்ட்மென்டைத் திருடணும்னு பந்தயம் போட்டாங்க. நான் தோத்துப் போயிட்டேன்... ஒரு அபார்ட்மென்டைத் திருடிட்டேன்.''

ஒரு ரயில் ஜிக் ஜிக் என்று அவர்களைக் கடந்தது. அவர்கள் முகத்தில் வெளிச்சமும், இருளும் மாறி மாறிப் படிந்து படிந்து விலகின.

''நீயும் வீட்டை விட்டு ஓடிவந்துட்டியா?'' என்று கேட்டான் விக்டர் ரயில் சத்தத்திற்கு இடையில்.

''இல்லே. நான் என் அப்பாவுக்காகக் காத்திருக்கேன். அவர் ரீகல்லேர்ந்து வர ட்ரெயின்ல வரப் போருர்.''

''அம்மா?''

''அம்மா இங்கேதான் இருக்கா. ஆனு எனக்கு அம்மாவைப் பிடிக்காது. நாலு வருஷத்துக்கு முன்னுலே அப்பாவைத் துரத்தியடிச்சவ. நான் அம்மாவை வெறுக்கறேன்... ஐ ஹேட் ஹர்... ஐ ஹேட் ஹர்!''

''ஸாரி!''

அவள் மௌனமாகச் சிறிதுநேரம் அழுதாள்.

''ஏய்... அழாதே... உன் பெயர் என்ன?''

''......ஸிம்ச்க்...''

''அழாதேம்மா... என் பெயர் விக்டர். எனக்கு ஒன்னை ரொம்பப் பிடிச்சிருக்கு... என் கூட வந்திடறியா... எங்கேயாவது போயிடலாம்...''

''நான் வரமாட்டேன்.''

''ஏன்?'' விக்டர் குழப்பமான முகத்துடன் அவளைப் பார்த்தான்.

''உன்கிட்ட ம்யூஸிக் இல்லே!''

''ம்யூஸிக்?''

''ஆமா...''

''அந்தப் போலீஸ்காரன் கிட்ட ம்யூஸிக் இருக்கா?''

''ம்!''

விக்டர் திரும்பிக் கொண்டான்.

மேம்பாலத்திற்கு அருகில் ஒரு டாக்ஸி வந்து நின்றது. அதிலிருந்து ஒரு பெண் இறங்கினுள்.

''ஒலிஸ்ஸீ...''

குரல் கேட்டு விக்டர் திரும்பினுன். அந்தப் பெண் மேம்பாலத்திலிருந்து இறங்கி வந்தாள்.

''ஒலிஸ்ஸீ...'' என்ருள் மறுபடி.

''என்ன?'' என்ருள் இவள் அமர்த்தலாக.

''வீட்டுக்கு வா ஒலிஸ்ஸீ... நீ இல்லாமல் எனக்குக் கஷ்டமாக இருக்கிறது...''

''வரமாட்டேன்... நான் அப்பாவுக்காகக் காத்திருக்கேன்...''



# மெஸேஜ் வேணுமா மெஸேஜ்...



''சினிமாவிலே இரண்டு ரூபா டிக்கெட் வாங்கறவன் முன்னாடி உட்காருகிறான். ஐந்து ரூபா டிக்கெட் வாங்கறவன் பின்னாடி உட்காருகிறான். யார் எங்க உட்கார்ந்தாலும் படம் ஒன்றுதானே! அது மாதிரி எந்த இடத்தில் இருந்தாலும் புத்திசாலித்தனமா பேசறவன் நிச்சயம் பிழைச்சுக்குவான்!''

''ஒருத்தனை யாருமே திமிர்னு குழப்ப முடியாது! நாம் ஏற்கெனவே குழப்பத்துல இருந்தாத்தான் யாராவது குழப்பும்போது பயங்கரமா குழம்பிப் போயிடுவோம். ஆனால் எப்பேர்ப்பட்ட குழப்பத்திலேயும் குழம்பாம இருக்கிறவன்தான் மனுஷன். இதை எல்லாரும் குழம்பாம புரிஞ்சுக்கணும்!''

இப்படி ஒன்றல்ல இரண்டல்ல, ஒவ்வொரு நாடகக் காட்சிக்கும் ஒரு தத்துவம் உதிர்க்கிறார் பாரு.

எதற்காகவாம்?

''நம்ம டிராமா துணுக்குத் தோரணமா இருக்கு; மெஸேஜ் இல்லேன்னு எல்லாரும் குறை சொல்றாங்களே, அதற்காகத்தான்!'' என்று வசனம் பேசுகிறார் எஸ். வி. சேகர்!

நாடகம்: ''வால் பையன்.''
தகவல்: ஜூலி.
படம்: மனோ கண்ணன்.

---

''உங்கப்பா ரொம்ப பிஸி... அவர் வர மாட்டாரும்மா...''

''இல்லே. நீதான் அப்பாவைத் தொரத்தியடிச்சிட்டே. அவரைப் பார்த்துட்டுத்தான் நான் வருவேன். நான் அவர் கூடத்தான் இருக்கப் போறேன்...''

''குளிர்ல விறைச்சுப் போய்டுவே ஒலிஸ்ஸி...''

''பரவாயில்லே...''

''எக்கேடோ கெட்டு ஒழி... யார் அந்தப் பையன்?''

''என் ஃப்ரெண்ட்.''

''இப்ப வீட்டுக்கு வரப் போறியா இல்லையா?''

''நோ...''

''நீ இங்கேயே கெடந்து செத்துப் போ... நான் போறேன்...''

மேம்பாலத்துப் படிகள் அதிர்ந்தன.

டாக்ஸி சீறியது. புகையைக் கக்கியது., போய் விட்டது.

''ஒலிஸ்ஸி...'' என்றான் விக்டர்.

''ம்...''

''வா. ரீகல் ட்ரெயின் வரப் போகுது. உங்கப்பாவைத் தேடலாம்...''

பெருமூச்சு விட்டுக் கொண்டே ரீகலில் இருந்து ட்ரெயின் வந்து சேர்ந்தது. ஒலிஸ்ஸி ஒவ்வொரு பெட்டியாகத் தேடினாள். அவள் முகத்தில் ஆவல். எதிர்பார்ப்பு. ஒவ்வொரு பெட்டியாகக் கடக்கக் கடக்க ஆவல், எதிர்பார்ப்பு அத்தனையும் தள்ளாடின.

''விக்டர், அப்பா வரலே விக்டர்.''

''அவர் ரொம்பப் பிஸியா இருக்காரோ என்னவோ... ஒண்ணு செய்யலாமா?''

''என்ன?''

''நான் எப்படியாவது ட்ரை பண்ணி இங்கேர்ந்து ரீகல் போற ட்ரெயின்ல ரெண்டு எடம் பிடிச்சிடறேன். நம்ம ரீகலுக்கே போய் உங்கப்பாவைப் பார்த்துடலாம்...''

''சரி... எனக்கு ஒரு சத்தியம் பண்ணிக் கொடு...''

''என்ன?''

''எங்கே போனாலும் என்னைக் கைவிட மாட்டேன்னு.''

''ப்ராமிஸ்... நீ இங்கேயே இரு... நான் ரீகல் போற ட்ரெயினுக்குப் போய் எடத்துக்கு வழி பண்ணிட்டு வரேன்...''

''ஓ. கே...''

ஒலிஸ்ஸி, கண்களில் ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருக்க விக்டர் ஓடினான்.

ப்ளாட்ஃபாரத்தில் இருந்த மனிதர்களை எல்லாம் விலக்கிக் கொண்டு ஓடினான். ஒரு கம்பார்ட்மெண்டிற்கு அருகில் ஒரு பெண் டீ. டீ. ஆர். நின்று கொண்டிருந்தாள்.

''மேடம்'' — மூச்சிரைத்தது விக்டருக்கு.

''என்ன?''

''எனக்காக என்னோட கல்யாணப் பொண்ணு ரீகல்ல காத்திட்டிருக்கா. நான் அவசரமா என் ஃப்ரெண்டோட ரீகலுக்குப் போகணும்... கொஞ்சம் ஹெல்ப் பண்ணுங்களேன்... ப்ளீஸ்...

''ஒனக்காகக் கல்யாணப் பொண்ணு காத்திட்டிருக்காளா? இந்த வயசில கல்யாணமா? நெஜத்தைச் சொல்லு...''

''ஐயோ மேடம்,... நெஜத்தைச் சொல்லணும்னா ரொம்ப நேரம் ஆகும். நான் அவசியமா ஒரு பெண்ணுக்கு ஹெல்ப் பண்ணியாகணும்... ப்ளீஸ்...''

''சரி கூட்டிட்டு வா.''

விக்டர் மறுபடியும் கூட்டத்தில் முட்டி மோதினான். ரயில் கிளம்ப நேரமாகி விட்டது. ஒலிஸ்ஸீயை உடனே அழைத்துவர வேண்டும். ரீகலில் போய் அவள் அப்பாவைச் சந்தித்து...

விக்டர் திடீரென்று நின்றான்.

யாரது?

ஒலிஸ்ஸீக்கு அருகில் அவளுடைய அம்மா. லேசாக மறைந்து நின்றான்.

"வந்துடு ஒலிஸ்ஸீ..." என்றாள் அம்மா அழுது கொண்டே.

"ம்ஹூம்ஹூம்" என்று மறுத்தாள் ஒலிஸ்ஸீ.

"இதோ பார். ஒரு தனி பொம்பளை. ஆஃபீஸ்லவேலைசெஞ்சுஒருசொந்தஅபார்ட்மென்ட் வாங்கியிருக்கேன். இதுக்கு மேல என்னால என்ன பண்ண முடியும். ஒன்னைத் திட்டியிருந்தா அது நான் ஆஃபீஸ்ல பட்ட அவதியால இருக்கும். வந்துடும்மா... ப்ளீஸ்!"

"இல்லே. நான் வர மாட்டேன். நீ அப்பாவைத் தொரத்தியடிச்சவ. எனக்கு ஒன்னைப் பிடிக்கலே. நான் அப்பாவைப் பார்க்க ரீகலுக்கே போகிறேன்..."

"வேண்டாம் ஒலிஸ்ஸீ... அங்கே உன் அப்பாவைப் பார்க்க முடியாது."

"ஏன்?"

"உங்கப்பா ரீகல்ல இல்லேம்மா. அவர் செத்துப் போயிட்டாரு..."

"என்னது?" — ஒலிஸ்ஸீக்கு அடை மழையாய்த் துக்கம் கொட்டி மனத்தில் வெள்ளம் புரண்டது.

"ப்ராமிஸ்?" என்று கேட்டாள்.

"சத்தியமாக."

"நோ. நீ பொய் சொல்றே. எனக்கு அப்பா கிட்டேயிருந்து வாழ்த்து வருதே. இன்னிக்கு முடிஞ்சா வரேன்னு தபால் வந்ததே..."

"அதெல்லாம் ஒன் ஆறுதலுக்காக நான் போடற தபால்மா ஒலிஸ்ஸீ... இங்கே பார் இன்னும் எத்தனை வாழ்த்தெல்லாம் எங்கிட்ட இருக்குன்னு...?"

"நெஜம்மாவாம்மா...?" கேட்கும் போதே மனத்தில் புரண்ட வெள்ளம் கண்களின் வழியாக வரத் தொடங்கியது.

"ஆமா ராஜாத்தி... டாக்ஸி சார்ஜ் ஏறிக்கிட்டே போகுது — வா வீட்டுக்குப் போகலாம் — அதை வேணும்னா அனுப்பிட்டு நம்ம ட்ரெயின்லேயே வீட்டுக்குப் போயிடலாமா?"

"ம்."

"நான் டாக்ஸியை டிஸ்போஸ் பண்ணிட்டு வந்துடறேன்.."

"சரி... நீ போ... நான் இங்கேயே இருக்கேன்..."

அம்மா அகன்றாள்.

விக்டர் அடிமேல் அடி வைத்து அவளை நெருங்கினான்.

"ஒலிஸ்ஸீ..." என்றான் மெதுவாக.

"ஓ... விக்டர்... விக்டர்" என்று அவன் மார்பில் சாய்ந்தாள் ஒலிஸ்ஸீ...

"எங்கப்பா செத்துப் போயிட்டாராம் விக்டர். நான் ரீகலுக்கு வந்து பிரயோஜனமில்ல..."

"ரயில் கௌம்பப் போகுது ஒலிஸ்ஸீ..."

"நான் ரீகலுக்கு வர முடியாது விக்டர்..." என்றாள். நிமிர்ந்தாள். கண்களைத் துடைத்துக் கொண்டாள். "நான் அம்மாவோட வீட்டுக்கே போறேன்..."

"ஒலிஸ்ஸீ..." என்று குரல் கேட்டது.

"இதோ வந்துட்டேம்மா... குட் பை விக்டர்."

"குட்... பை" என்று முணுமுணுத்தான் விக்டர்.

ஒலிஸ்ஸீயும், அவள் அம்மாவுமாகச் சேர்ந்து ப்ளாட்ஃபாரத்தில் நடந்தார்கள். ரயில் முதல் விசிலை ஊதியது. அந்தப் பெண் டி. டி. ஆர். விக்டருக்காகப் பார்வையைத் துழாவினாள். மனிதர்கள் இறக்கை இன்றி அவசரத்தில் பறந்தார்கள்.

விக்டர் பார்த்துக் கொண்டே நின்றான். கையில் ஒலிஸ்ஸீ அவளுடைய நினைவாகக் கொடுத்த விசில் இருந்தது.

ரயில்மெல்ல...மிகமெல்லநகரத்தொடங்கியது.

கண்ணாடிச் சதுரத்தின் வழியாக ஒலிஸ்ஸீ பார்த்தாள்.

டி. டி. ஆர். லேசான ஏமாற்றத்துடன் வண்டியில் ஏறினான்.

"ஒலிஸ்ஸீ..." என்று கத்தினான் விக்டர். "என்கிட்டயா ம்யூஸிக் இல்லேன்னு சொன்னே... என்கிட்டயும் ம்யூஸிக் இருக்குன்னு காட்றேன் பார்..."

"பிர்ர்ர்ர்ர்ர்ர்... பிர்ர்ர்ர்ர்ர்ர்.... பிர்ர்ர்ர்ர்ர்ர்..."

அந்த விசிலைப் பலங்கொண்ட மட்டும் ஊதினான்.

ஒரு போலீஸ்காரர் தடதடவென ஓடிவந்தார்.

"நீயா விசில் ஊதினே?" என்றார்.

"ஆமாம்.." என்றான் விக்டர்.

"ஏன்?"

"நான் ஒரு அபார்ட்மென்ட்ல திருடிட்டேன் சார்," என்றான் விக்டர்.

"அப்ப சரி... ஸ்டேஷனுக்குப் போலாம் வா..."

விக்டரும், போலீஸ்காரரும் மெல்ல நடக்கத் தொடங்கினார்கள்.

ஒலிஸ்ஸீ கன்னத்தில் நீர்க்கோட்டுடன் கையாட்டினாள்.

ரயில் வேகம் எடுத்தது.

'CAGE FOR CANARIES' என்னும் இந்த ரஷ்யப் படத்தை இயக்கியவர், பாவல் சுக்ரே. விக்டர் பாத்திரத்தில் வ்யாஷ்ஸ்லேவ்பராநோவ், ஒலிஸ்ஸீ ரோலில் எவ்ஜின்யா டெப்ரோவோல்ஸ்க்யா (ஸாரி அதுதான் பெயர்; என்ன செய்யட்டும்?) — இரண்டு பேரும் ஜமாய்த்திருக்கிறார்கள். இரயில்வே இரைச்சல்களின் படப்பிடிப்பு, இயல்பு. படம் முடிந்தபின் கிளம்பிய கைதட்டல்கள், தியேட்டரின் அஸ்திவாரத்தையே அசைத்து விட்டன!

— ஜெயமன்மதன்.

# கோயில் யானை

சின்ன வயதிலிருந்து ஒன்றாய்ப் பழகி, வளர்ந்தவுடன் காதல் வயப்பட்டு, ஜாதி, அந்தஸ்து, முறை மாமன் காரணங்களால் பிரிக்கப்பட்டு, சோக கீதம் பாடி, அடியாட்களுடன் சண்டை போட்டு, முக்கியமான ஆபத்து நேரங்களில் கோயில் யானையால் காப்பாற்றப்பட்டு, ஆசைப்பட்டதற்குக் குறுக்கே நின்ற வில்லன் மாமாவுடன் தடாலடிச் சண்டை போட்டு, வில்லன்கள் அழிந்து, காதல் — கல்யாணத்தில் முடிந்து......

என்று நீளமாகச் சொல்ல வேண்டாம். ஒரு ஃபார்முலா தமிழ்க் கதை என்றால் போதாதா?

ஜெயஸ்ரீயை மழையில் தோய்த்து எடுத்திருக்கிறார்கள். பாண்டியனைப் புரட்டி எடுத்திருக்கிறார்கள்; பயில்வான் ரங்கநாதன் வாயால் நாலைந்து வரிப் பிரசாரம் செய்திருக்கிறார்கள். ராதா ரவியைச் சிற வைத்திருக்கிறார்கள் — உருப்படியாய்த் தன் ரோலைச் செய்திருக்கும் யானைக்கு மட்டும் ஜே!

யானையைத் தீர்த்துக் கட்ட வில்லன் அன்று கோ ஒரு தேங்காய்க்குள் வெடி குண்டைப் பொருத்தி அதற்குக் கொடுக்க, அது விசுவாசமாய் அதைத் தன் பாகனிடம் கொடுக்க, பாகன் ஒரு கடையில் அதை விற்று விட, அதே தேங்காயைச் சமையலுக்காக அதே வில்லன்கள் வாங்கிப் போய் வீட்டில் உடைக்க — ரசிக்கும்படியான ஸீன்.

இந்தப் படத்துக்கு அறிவுப் போட்டி வைப்பதென்றால் இப்படி நடத்தலாம்:

திரைக்கதை, வசனம்...
ரம்பம்/பிளேடு
நாயக நாயகி நடிப்பு...
போதாது/தேறாது
சந்திரபோஸின் இசை...
கடாமுடா/தடார் புடார்
வர்ணப் படப் பிடிப்பு,
கண்களுக்கு...
வேதனை/சோதனை.

— ஜெயமன்மதன்.





* அவினாசிலிங்கம்: "இடைவிடாமல் படித்தார் ஸி. ஆர்."

* அனந்த சயனம் அய்யங்கார்: "சுறுசுறுப்பாக இருக்கச் செய்தார் ஸி. ஆர்."



* இருபனாளி: ஸி. ஆருக்குச் செய்தி கொண்டு சென்றவர்.



* கோபாலரெட்டி: "ஷேக்ஸ்பியரை விளக்கினார் ராஜாஜி."

**8**

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு — II**

**ராஜ்மோகன் காந்தி**

சில நாட்களுக்குள் திருச்சி ஜெயிலுக்கு மாற்றப்பட்ட 62 வயதான ஸி. ஆர்., சிறை வாசத்துக்கு மீண்டும் தம்மைப் பழக்கப் படுத்திக் கொள்ள முயன்றார். அவர் கடைசியாக அரசாங்க விருந்தினராக இருந்தது ஏழு ஆண்டுகளுக்கு முன்பு. இடைக் காலத்தில் சென்னை ராஜதானியின் பிரதம மந்திரி என்ற முறையில் விசேஷ வசதிகளை அனுபவித்திருந்தார். இப்போதோ ஒவ்வொரு இரவும் அவரைப் பூட்டி வைத்தார்கள். உறவினரோ, நண்பர்களோ சிறையில் அவரை வந்து பார்க்க எப்போதேனும்தான் அனுமதிக்கப் பட்டனர். அதுவும் சிறிது நேரத்துக்கே — அதிக பட்சம் இருபது நிமிடங்கள். இந்த உரையாடல்கள் ஒவ்வொன்றையும் துப்பறியும் இலாகாவினர் அருகிலிருந்து கேட்டார்கள்.

சத்தியாக்கிரஹத்துக்கு முன்னால் மகாத்மாவுக்கும் ஸி. ஆருக்கும் இடையே நிலவிய கருத்து வேறுபாடு ஆழமானது. என்றாலும் சொற்ப காலத்துக்கே நீடித்தது. அவர்களிடையே நிலவிய அன்பு சற்றும் பாதிக்கப் படவில்லை. "நான் உங்களுக்குக் கடிதம் எழுத வேண்டிய அவசியமே இல்லை என்பது எனக்குத் தெரியும்" என்று தொடங்கிய கடிதத்தில் மகாத்மா ஸி. ஆருக்குச் சொன்னார்: "இதயங்கள் உரையாடும் போது கடிதங்களுக்கு அர்த்தமில்லை. நாங்கள் வெளியே கடமையாற்றிக் கொண்டிருக்கிறோம்; நீங்களும் அங்கு உங்கள் கடமையைத்தான் நிறைவேற்றிக் கொண்டிருக்கிறீர்கள். உடம்பைக் கவனமாகப் பார்த்துக் கொண்டு ஹிந்தி படிப்பைப் பூர்த்தி செய்துவிடுங்கள். அன்பு."

மொழித் தொடர்பான கட்டளையை ஸி. ஆர். மீறினார். உருது லிபியில் ஹிந்துஸ்தானி கற்றுக் கொள்ள ஒரு சிறு முயற்சி செய்ததோடு சரி. வால்மீகி, கம்பர், துளசிதாஸ் ஆகியோர் படைத்த ராமாயண வடிவங்களை விரிவாகவும் ஆழ்ந்தும் கற்றார். கற்றதைப் பிறரோடு பகிர்ந்து கொள்ளவும் செய்தார். திருச்சி சிறையில் பெரிய குடும்பமாக வாழ்ந்த பலருள் ஒருவரும், பின்னால் நாடாளுமன்ற சபாநாயகராகத் திகழ்ந்தவருமான அனந்தசயனம் ஐயங்கார் நினைவு

# சிறையில் தவம்



இறந்து போன அதிகாரிகளுக்கும் அலுவலர்களுக்கும் அஞ்சலி செலுத்துவதற்காகக் கூட்டப்பட்ட கூட்டத்தில், ஜம்மு காஷ்மீர் முதலமைச்சர் ஜி. எம். ஷா கலந்து கொண்டார். அப்போது போலீஸ் டி-ஐ-ஜி. ராம் பிரகாஷ் என்பவர் ஒரு மலர் வளையத்தை ஷாவின் காலடியில் வைத்தார். திடுக்கிட்ட ஷாவைப் பார்த்து அவர் சொன்னார். ''இறந்து போனவர்களுக்கு நீங்கள் அஞ்சலி செலுத்துகிறீர்கள்! நானோ நீங்கள் தியாகம் செய்த உங்களுடைய மனச்சாட்சிக்கு அஞ்சலி செலுத்துகின்றேன்!'' என்றாராம்!

—தீதாபஞ்சு.

கூர்ந்து கூறினார்:

''காலை முதல் மாலை வரை ராஜாஜி எங்களைச் சதா ஏதாவது காரியத்தில் ஈடுபடுத்தினார். ஒவ்வொரு நாளும் காலைச் சிற்றுண்டிக்குப் பிறகு, எங்களுள் ஒரு பகுதியினர் வால்மீகி ராமாயணத்தைப் படிப்போம். இந்தக் கூட்டங்களுக்குத் தலைமை தாங்கிய ஸி. ஆர். ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்திருக்க, நாங்கள் பதினைந்து இருபது பேர் அவர் முன்னால் ஜமுக்காளத்தில் உட்கார்ந்திருப்போம். எங்களுள் இனிமையான குரலுடைய ஒருவர் ராமாயணத்தையும் இன்னொருவர் கோவிந்தராஜரின் உரையையும் படிப்போம்.''

கீதை, குறள் மற்றும் ஷேக்ஸ்பியர் வகுப்புகளையும் நடத்தி வந்தார் ஸி. ஆர். சக கைதி கே. வரதாச்சாரி நடத்திய கர்நாடக சங்கீத வகுப்புகளுக்குச் சென்றார். ''எங்களில் சிலர் ராஜாஜியுடன் சேர்ந்து துயர முடிவு கொண்ட ஒன்றிரண்டு ஷேக்ஸ்பியர் நாடகங்களைப் படித்தோம்'' என்று நினைவு கூர்கிறார் ஸி. ஆரின் மந்திரிசபையில் இடம்பெற்றிருந்த பி. கோபால ரெட்டி. ''சில கட்டங்களை அசாத்திய ஆற்றலுடன் எங்களுக்கு விளக்கினார்.''

சிறையில் உணவு பரிமாறும் பணியைச் சில சமயம் ஏற்றுக் கொண்ட சக கைதி பி. டி. வெங்கடாசார், ஒவ்வொரு வேளையும் ஸி. ஆர். வெகு கண்டிப்புடன் 1½ அவுன்ஸ் சாதம் மட்டுமே சாப்பிட்டார் என்பதை ஞாபகம் வைத்திருந்து குறிப்பிடுகிறார். இவர் குடும்பம் வாரந்தோறும் ஸி. ஆருக்குப் பப்பாளிப் பழங்களை அனுப்பியது. மற்றொரு சிறைச்சாலை நண்பர் டி. எஸ். அவினாசிலிங்கம், ஸி. ஆர். இடைவிடாமல் படித்துக் கொண்டிருந்ததாகவும், சுறுசுறுப்புடன் பயனுள்ள வகையில் நேரத்தைச் செலவிடுவது அவருக்கு எளிதாகவும் மகிழ்ச்சி அளிப்பதாகவும் விளங்கியதென்றும் குறிப்பிடுகிறார். எடின்பரோவிலிருந்து பேராசிரியர் டெய்ட் அனுப்பிய ஸ்காட்ஸ் ஜர்னல் சஞ்சிகைகளின் தொகுப்பை வெகு சுவாரஸ்யத்துடன் வாசித்தார் ஸி. ஆர். பேராசிரியருக்கு நன்றி தெரிவித்தும் அவர் உடல் நலன் பற்றி விசாரித்தும் ஸி. ஆர். நரசிம்மனுக்குக் கடிதம் எழுதினார். இரண்டு வாரங்களுக்கு ஒருமுறை ஒரு கடிதம் மட்டுமே எழுத அனுமதி இருந்ததால் ஸி. ஆர். குறிப்புக்களை நரசிம்மனுக்கு எழுத, அவர் ஸி. ஆர். சார்பில் பிறருக்கு அச்செய்திகளை அனுப்பி வந்தார்.

வெங்கடாச்சார் நினைவு கூரும் சம்பவம் ஒன்று ஸி. ஆரின் தார்மீக ஒழுக்கத்தைப் புலப்படுத்துகிறது. டாக்டர் சுப்பராயனுடைய பண்ணையின் மானேஜராக இருந்தவர் ராஜாஜியின் சகோதரர் ஸ்ரீனிவாசாச்சார் — இவர் ஒரு நாள் ஸி. ஆருடன் திருச்சி ஜெயிலில் இருந்த சுப்பராயனைக் காண வந்தார். ஸி. ஆர். தம் சகோதரரைப் பார்க்கிறாரா; அவருடன் பேசுகிறாரா என்று சக கைதிகள் ஆவலுடன் கவனித்துக் கொண்டிருந்தனர். ஆனால் ஸி. ஆர். அப்படிச் செய்யவில்லை. ஸ்ரீனிவாஸாச்சார் காண வந்தது சுப்பராயனையே; தம்மைச் சந்தித்துப் பேச அவருக்கு அனுமதி வழங்கப்படவில்லை என்பதை உணர்ந்து சிறைச்சாலை விதிகளைக் கடுமையாகக் கடைப்பிடித்தார். காங்கிரஸின் பொதுக் காரியதரிசி கிருபளானிக்குச் சத்தியாக்கிரஹத்தில் ஈடுபடுவதிலிருந்து விதி விலக்கு அளித்திருந்தார் மகாத்மா. இவருக்குஸி. ஆரைக் காண அனுமதிகிடைத்தது. பிரிட்டிஷாரின் போக்கு மாறவேயில்லை என்ற செய்தியை அவர் கொண்டு வந்தார். 'இன்னும் நிறையப் பேர் பிரிட்டிஷ் அரசின் சிறைச்சாலைகளை நிரப்ப வேண்டும்' என்ற தமது ஆசையை ஸி. ஆர். கிருபளானியிடம் வெளியிட்டார். ஆனால், தனி நபர் சத்தியாக்கிரஹத்தை அனுமதித்த மகாத்மா, வெகுஜன சட்ட மறுப்பு இயக்கத்தை வேண்டாமென ஒதுக்கியிருந்தார்.

ஆழ்ந்த படிப்பில் பல மாதங்கள் கழிந்தன. தேசநலன் பற்றியும் அதன் எதிர்காலம் குறித்தும் யோசித்துக் கொண்டும், காத்துக் கொண்டும் இருந்த ஸி. ஆர்., ஆழ்ந்த படிப்பு மூலம் அறிவையும், மனத்தையும் வளப்படுத்திக்கொண்டுமிருந்தார். வெளியே உலக நாடுகளின் எல்லைக் கோடுகள் மாறிக் கொண்டிருந்தன! ஹிட்லர் சோவியத் யூனியனைத் தாக்கியிருந்தார். உள்நாட்டிலும் உறவிலும் அதிர்ச்சி தரும் சம்பவங்கள் நிகழ்ந்தன. டாகூர் காலமானார். ஸி. ஆரின் சிறைவாசம் முடியச் சில நாட்களே இருந்த போது, அவர் சகோதரர் ஸ்ரீனிவாஸாச்சாரின் பிள்ளைகள் துரைசுவாமியும் (25 வயது) ராஜகோபாலும் (22 வயது) டைபாயிட் ஜுரத்தில் அடுத்தடுத்து உயிர் இழந்தனர். இரண்டு பிள்ளைகளும் அறிவிற் சிறந்தவர்கள்; தங்கப்பதக்கங்கள் பெற்றவர்கள். நெஞ்சை வாட்டும் விநோதமான செயல்களை விதி அனுமதித்துக் கொண்டிருந்தது. அக்டோபர் 6, 1941 — சிறைவாச காலம் முடிந்து ஸி. ஆர். விடுதலையானார்.

(தொடரும்)

தமிழாக்கம்: சீதாரவி



# N. S. K.



## மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

அன்புடையீர்,

இந்தியாவின் எல்லா பாகங்களிலும் உள்ள எமது N.S.K. பைனான்சியர்ஸ் வாடிக்கையாளர்களுக்கும் N.S.K. சிட்பண்ட்ஸ் வாடிக்கையாளர்களுக்கும், இதர நண்பர்களுக்கும் தாங்கள் இதுவரை தொடர்ந்து தங்களுடைய பேராதரவை தந்தமைக்கு எங்களுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். நாங்கள் 10-2-86 தேதியில் எமது மற்றுமொரு புதிய நிறுவனம்

**N.S.K. மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்**

திறக்க இருப்பதை மகிழ்ச்சியுடன் தங்களுக்கு தெரிவித்துக் கொள்வதுடன் தங்களின் பேராதரவையும் தொடர்ந்து வழங்க வேண்டுகிறோம். எமது வாடிக்கையாளர்கள் விருப்பத்திற்கிணங்க இதுவரை நடந்து வருவதுபோல் குறிப்பிட்ட தேதிக்கு முன்னதாக கிடைக்கும் வட்டி விகிதங்களும், உங்களது முதலீட்டை உரிய காலத்தில் திருப்பி தருவதிலும் எங்களது பணி தொடர்ந்து நடைபெறும் என்பதை உறுதி அளிக்கிறோம்.

கீழ்க்கண்ட கவர்ச்சிகரமான வட்டி வீதங்களின் மேல் டெபாஸிட்டுகள் வரவேற்கப்படுகிறது.

**வட்டி விகிதம் 26%**

| 1 வருடம் | 2 வருடம் | 3 வருடம் | 4 வருடம் |
|---|---|---|---|
| 20% | 21% | 22% | 24% |

(குறைந்தபட்சம் ரூ. 1000/-ம் அதன் மடங்குகளும் ஏற்றுக் கொள்ளப்படும்).

3 மாதங்களுக்கு ஒரு முறை வட்டி பெற கூடுதல் போனஸ்
1% + 24 = 25%

6 மாதங்களுக்கு ஒரு முறை வட்டி பெற கூடுதல் போனஸ்
2% + 24 = 26%

**கங்கா கேஷ் சர்ட்டிபிகேட்** உங்களுடைய முதலீடு 42 மாதங்களில் இரு மடங்காகிறது. உதாரணம் ரூ. 10,000 = ரூ. 20,000/

பேங்க் கேஷ் சர்டிபிகேட்டுடன் டெபாஸிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

**அன்பளிப்பு**

| முதலீடு | வருடம் | சிறப்புப் பரிசு |
|---|---|---|
| ரூ. 25,000/- | 5 | 1 சவரன் தங்க நாணயம் |
| ரூ. 15,000/- | 5 | ½ சவரன் தங்க நாணயம் |
| ரூ. 5,000/- | 3 | 1 HMT வாட்ச் |
| ரூ. 5,000/- | 2 | 1 அழகிய வெள்ளி குத்துவிளக்கு |

சிறப்புப் பரிசுகள் 28-2-86 தேதி வரை மட்டுமே வழங்கப்படும்.
இந்த பொன்னான வாய்ப்பை நழுவ விடாதீர்கள்.
உங்கள் பேராதரவை என்றென்றும் எதிர்பார்க்கும்.

குறிப்பு: தங்களின் சேவைக்காக N.S.K. யின் மற்றும் ஒரு புதிய நிறுவனம் N.S.K. Real Estate குறுகிய காலத்தில் ஆரம்பிக்க இருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.



**N. S. K. மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்**

எண். 38B, பர்கிட் ரோடு (முதல் மாடியில்) (தி.நகர் பேருந்து நிலையம் எதிர்புறம்) தி.நகர், சென்னை-600 017. போன்: 447135



# பாக். அணுகுண்டு நிஜமானதா? அதைச் சந்திக்க நாம் தயாரா?

## —ஜெனரல் சுந்தர்ஜியுடன் பேட்டி

**பொற்கோவிலில் நடந்த ராணுவ நடவடிக்கைக்குத் தலைமை தாங்கிய சுந்தர்ஜி, இன்று நமது ராணுவத்தின் பிரதம தளபதி. சென்ற இதழில் அந்த ராணுவப் பிரவேசத்தின் சில அம்சங்களை விளக்கிய அவர், இந்த இதழில் அந்தச் சம்பவத்தின் போது தமது மனநிலை எவ்வாறிருந்தது என்று கூறத் தொடங்கி, மேலும் பல பரபரப்பான விஷயங்களை அலசுகிறார். பேட்டி காண்பவர்: வாஸந்தி.**



சுந்தர்ஜி: பொற்கோயிலில் ராணுவப் பிரவேசத்துக்குத் தலைமை தாங்கியபோது எனக்கு மிகவும் வேதனையாகத்தான் இருந்தது. யாருக்குமே தங்களைச் சேர்ந்தவர்களையே — அவர்கள் தவறான பாதையில் சென்றவர்களானாலும் — தாக்குவது வருத்தத்தைத்தான் அளிக்கும்.

கேள்வி: ஆரம்பத்தில் உங்கள் பக்கத்தில் காயம் அடைந்தவர்களும் மரணத்தை அணைத்தவர்களும் அதிகமாயிருந்ததற்கு என்ன காரணம்?

சுந்தர்ஜி: நாங்கள் மிகக் குறைந்த அளவே, எங்கள் பலத்தைப் பிரயோகிக்க விரும்பினோம். அந்த முடிவுக்கு வந்த பிறகு— இதை எதிர்பார்க்கத்தான் வேண்டும். இந்த அளவில் நாம் நினைத்ததை சாதிக்க முடியாது என்று தெரிந்த பிறகுதான் பலத்தை அதிகரித்தோம். இதுவே வேற்று நாட்டு எதிரியாக இருந்தால் எடுத்த எடுப்பிலேயே முழு பலத்தைக் கூட பிரயோகித்திருக்கலாம். அந்த நிலைக்களன் புனிதமானது என்பதையும் அதற்கு அதிக சேதம் ஏற்படக் கூடாது என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டியிருந்தது.

கேள்வி: உள்ளே இருந்தவர்களின் பலத்தைக் கணித்துக் கொண்ட பிறகு டாங்க்கை உள்ளே எடுத்துச் செல்லத் தீர்மானிக்கப்பட்டதா?





சுந்தர்ஜி: நடவடிக்கை ஆரம்பமாகு முன்னரே இரண்டு காரணங்களுக்காக டாங்குகள் உரிய இடங்களில் நிறுத்தப்பட்டிருந்தன. பொற்கோவில் வளாகத்தில் இரண்டு பகுதிகள் — ஒரு பக்கம் லாங்கோவால், தோரா முதலியவர்கள். மறு பக்கம் பிந்திரன் வாலேயும் அவரது ஆட்களும். பிந்திரன் வாலேயின் ஆட்கள் முந்தைய பகுதிக்குள்ளும் புகுந்திருந்தார்கள். அவர்கள் லாங்கோவாலேயும் தோராவையும் கொல்லத் திட்டமிட்டிருந்தார்கள் என்று எங்களுக்குத் தெரியும். இந்த வகை உட்போரைத் தவிர்க்கும் எண்ணத்தில் SGPC காரியாலயம் இருந்த சாலையில் டாங்குகளை நிறுத்தி வைத்திருந்தேன். இரண்டாவது காரணம் அவசியம் ஏற்பட்டால் டாங்குகளை உபயோகப்படுத்த நேரும் என்பது. கடைசியில் மெய்யாலுமே அதை உபயோகிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது. கட்டாயத்திஞல் மட்டுமே டாங்குகளை உபயோகிக்க நேர்ந்தது. அவசரப்பட்டு உபயோகிக்கவில்லை. இந்தக் கட்டுப்பாட்டிஞலும் அதிகபட்ச சிப்பாய்களை நாம் ஆரம்பத்தில் இழக்க நேர்ந்தது.

கேள்வி: பொற்கோவிலுக்குள் ஏற்பட்டுப் போயிருந்த நிலவரத்தில் ராணுவப் பிரவேசம் மிக அவசியமாகிவிட்டது என்பதை ஒப்புக் கொள்வதாஞலும் ஒரு படையெடுப்பைத் தவிர்த்து, வேறு விதங்களில் உள்ளேயிருந்த பயங்கரவாதிகளை வெளியேற்றியிருக்க முடியாதா? அணுகு முறையில் இதற்கான வேறு நவீன நடைமுறை ஏதும் இல்லையா?

சுந்தர்ஜி: உங்கள் கேள்வியை இரண்டு பாகமாக அணுக வேண்டும். ஒன்று, ராணுவப் பிரவேசத்துக்கு முன்பு என்ன செய்யப்பட்டிருக்க வேண்டும் என்பது. இதற்கு என்ஞல் பதில் சொல்ல முடியாது. இது ஓர் அரசியல் கேள்வி. அரசியல் ரீதியில் என்ன செய்திருக்க வேண்டும், செய்யவில்லை என்பதைப் பற்றி விவாதிக்க எனக்கு உரிமையோ தகுதியோ இல்லை. ஆஞல் ராணுவம் அழைக்கப்பட்ட கணத்தை வைத்து எடைபோடுவதாஞல் அன்றும் இன்றும் நான் திட்டவட்டமாகச் சொல்வேன் — அந்தத் தருணத்தில் ராணுவத்தைக் கூப்பிடுவதைத் தவிர வேறு வழி இருக்கவில்லை.

நீங்கள் நவீன முறைகள் பற்றிக் கேட்டீர்கள். அதாவது குறைந்தபட்ச சேதத்தில் அதிகபட்ச வெற்றியைத் தரக்கூடிய ஓர் உத்தி. அவ்வாறு பார்த்தால் நாங்கள் உபயோகப்படுத்தக் கூடியது வாயு குண்டு ஒன்றுதான். நாங்கள் அகால்தக்துக்குள் இருந்தவர்களை வெளியே வரவழைப்பதற்காக ஸி.எஸ். வாயுவை உபயோகிக்கத்தான் செய்தோம். இந்த வாயு எதிராளியைச் சற்று நேரத்துக்கு முற்றிலுமாகச் செயலிழக்கச் செய்யும். துரதிர்ஷ்டவசமாக எங்கள் முயற்சி வெற்றி பெறவில்லை. அகால்தக்துக்குள் வாயு நுழைய முடியாதபடி துவாரமே இல்லாமல் அடைக்கப்ப்ட்டிருந்தது. அன்றைக்கு அடித்த காற்றில் அந்த வாயு எங்கள் சிப்பாய்கள் மேலேயே திரும்பிற்று. அகால்தக்த் நவீனக் கட்டடமாக இருந்திருந்தால், உள்ளே அமைந்திருக்கக்கூடிய காற்ஞேட்டக் குழாய் அல்லது தண்ணீர்க் குழாய்கள் மூலம் நாங்கள் வாயுவை உள்ளே பம்ப் செய்திருப்போம். ஆஞல் அது புராதனக் கட்டடம். எனவே இது சாத்தியமாகவில்லை. பயங்கரவாதிகள், எங்களுடைய உறுதியையும் தீவிரத்தையும் புரிந்து கொண்டு சீக்கிரம் சரணடைந்திருந்தார்களாஞல் சேதத்தைக் குறைத்திருக்கலாம். ஆஞல் அவர்கள் அப்படிச் செய்யவில்லை. எங்களை எதிர்க்கத் தீர்மானித்து இடைவிடாமல் திரும்பச் சுட்டார்கள். அவர்கள் உள்ளே அமர்ந்து சுட்டதால் எங்களை விட பாதுகாப்பான நிலையில் இருந்தார்கள். அவர்கள் சரணடைய மாட்டார்கள் என்று உறுதியான பிறகுதான் நாங்கள் பலாத்காரத்தைப் பயன்படுத்த வேண்டியிருந்தது.

கேள்வி: பாகிஸ்தானின் அணு குண்டு பயமுறுத்தல் எத்தனை நிஜமானது? அதைச் சந்திக்க நாம் எந்த அளவுக்குத் தயாராக இருக்கிறேம்?

சுந்தர்ஜி: பாகிஸ்தான் அணு ஆயுத உற்பத்திக்குத் தயாராகி வருகிறது. கிட்டத்தட்ட தயாராகிவிட்டது என்பதற்கு ஆதாரங்கள்

கிடைத்து வருகின்றன. இது கவலை தரும் விஷயம். நமது அரசு இதைப் பற்றிய பூரண பிரக்ஞையுடன் இருக்கிறது. நாட்டின் தற்காப்புக்கான திட்டங்களில் தீவிர கவனம் செலுத்துகிறது. ராணுவத்தைப் பொறுத்த வரை நாங்கள் எதிரியின் பலத்துக்குத் தகுந்த மாதிரி எங்களைத் தயார் படுத்திக் கொள்ள எல்லாவித முயற்சிகளையும் எடுப்போம். எதிரியை விட பலம் குறைந்த நிலையில் நிச்சயம் இருக்க மாட்டோம்.

கேள்வி: எதிரியைச் சம நிலையில் சந்திக்கும் அளவுக்கு நம்மிடம் நவீன ஆயுதங்கள் இருக்கிறதா? நமது ராணுவம் எந்த அளவுக்கு நவீனமடைந்திருக்கிறது?

சுந்தர்ஜி: நவீனப்படுத்துதல் என்பது ஒரு தொடர்ச்சியான விஷயம். அடிப்படையில் இது டெக்னலாஜிக்கல் முன்னேற்றத்தைச் சார்ந்தது. அதற்கேற்ப ஆயுதங்களும் அதிக சக்தி வாய்ந்தனவாக, துரிதமாக இயங்கக் கூடியனவாக மாறும். இது ஏற்படும்போது நமது அணுகு முறைகளிலும் மாறுதல் ஏற்பட வேண்டும். இந்த நவீன ஆயுதங்களை முழுமையாகப் பயன்படுத்தக்கூடிய நிலைக்கு ராணுவத்தினர் மாற வேண்டும் அல்லது முன்னேற வேண்டும். இந்த மாறுதல்கள் ராணுவ அமைப்புக்களிலும் மாறுதல்களை உருவாக்கும். இவையெல்லாம் ஒட்டு மொத்தமாகச் சேர்ந்ததுதான் நவீனமயமாதல் என்பது. ஆனால் இந்த மாறுதல் தினசரி நிகழ்ச்சியாக இருக்க முடியாது. இருந்தால் ஒரு நிலையற்ற—நிச்சயமற்ற தன்மை ஏற்படும். ஆயுதங்களில் ஏற்படும் நவீன மாறுதல்களைக் கவனத்தில் கொண்டு ராணுவத்தின் அணுகுமுறைகளிலும் மாற்றங்களைக் கொண்டு வரவேண்டும். 70 களின் கடைசியிலிருந்து, மாற்றங்கள் ஏற்படுத்துவதிலும் புதுமைகளைப் புகுத்துவதிலும் தீவிர கவனம் செலுத்தப்பட்டு வந்திருக்கிறது. எந்த மாதிரி மாறுதலைக் கொண்டுவர வேண்டும் என்று தீர்மானிக்க வேண்டிய தருணம் இப்பொழுது மீண்டும் வந்துவிட்டது. அடுத்த பத்து ஆண்டுகளில், நவீனப்படுத்தும் முயற்சியில் ராணுவத்தில் நிறைய மாறுதல்கள் துரிதமாக ஏற்படப் போகின்றன. தற்சமயம் அரசு இதில் தீவிர கவனம் செலுத்தி வருகிறது. ராணுவமும் இந்த விஷயத்தில் முழு மூச்சுடன் செயல்படும்.

கேள்வி: இதற்குத்தான் நீங்கள் முக்கியத்துவம் தரப் போகிறீர்களா?

சுந்தர்ஜி: நிச்சயமாக. முதல் முக்கியத்துவம் ராணுவத்தின் எல்லாத் துறைகளிலும்



## பாண்டிச்சேரி சிறப்பிதழ்: சில விளக்கங்கள்

பாண்டிச்சேரி சிறப்பிதழில் பாரதியார் புஷ் வண்டியில் போயிருப்பாரா? என்ற கேள்வி எழுப்பப்பட்டுள்ளது. பாரதியார் வெளியே கிளம்பினால் புஷ் வண்டிக்காரர்கள் அவரை நடக்க விடமாட்டார்கள்; அவரை ஏற்றிச் செல்வதற்கு வாடகைப் பணமும் வாங்க மாட்டார்கள்; அந்த [illegible] சல்லாபித்து இனி வேண்டும் என்று கேட்கும்படி செய்வார் பாரதி; பிறகு தமது மேலாடையை—பட்டோ, சரிகை துப்பட்டாவோ அவர்களுக்குக் கொடுத்து விடுவார் என்று வ. ரா. எழுதியிருக்கிறார்.

— அநந்தன், சென்னை—40.

காரைக்கால் கட்டுரையின் தொடக்கத்தில் உள்ள பாடல் பின்வருமாறு இருக்க வேண்டும்:

காரைக்கால் ரோட்டைப் பாரு;
காதர் சுல்தான் வீட்டைப் பாரு!

அந்த வீடு 13 ஆண்டுகளுக்கு முன்பு கைமாறியது. பாட்டு முன்பிருந்தே நெடுங்காலமாய் உள்ளது. பாட்டுக்கும் வீட்டுக்கும் உள்ள பெருமை அதன் பழைய சொந்தக்காரர்கள் காதர் சுல்தான் சந்ததியினரையே சேரும்.

— இப்னு அலி, காரைக்கால்.

பாரதிதாசன் வீட்டுக்கு அதிகப் பணம் பெற நீதிமன்றத்துக்குச் சென்ற கதையை விவகாரமாக வந்தது கூறியதாகக் குறிப்பிட்ட திருமதி, இன்னும் கொஞ்சம் விசாரித்திருந்தால்; தமிழக அரசு பாரதிதாசன் மனைவிக்கு மாதம் தோறும் உதவித் தொகை வழங்கி வருவது பற்றியும், மகள் வசந்தாவுக்குப் போதிய கல்வித் தகுதி இல்லாத போதும் உதவி நூலகராக அமர்த்திச் சம்பளம் வழங்குவது குறித்தும், மற்றும் மகன், பேரன் ஆகியோருக்கு வேலை வாய்ப்பு அளித்துள்ளது பற்றியும் அறிந்து கொண்டிருக்கலாம்.

— இரா. சீனிவாசன், புதுவை—4.

அதிகாரிகளின், வீரர்களின் தரத்தை உயர்த்துவது. இரண்டாவது, ராணுவ அமைப்பை, அதன் அணுகு முறையை நவீனப்படுத்துவது. முதலாவது தரமாக இல்லையென்றால் இரண்டாவது வெற்றி பெறாது. இரண்டும் சமமான முக்கியத்துவம் கொண்டவை.

கேள்வி: முழுக்க முழுக்க இந்தியத் தயாரிப்பான ஆயுதங்களை உருவாக்க இன்னும் எத்தனை காலம் ஆகும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?

சுந்தர்ஜி: ராணுவத்தைப் பொறுத்தவரை, நான் பெருமையுடன் சொல்ல முடியும். நாம் கிட்டத்தட்ட அந்தக் கால கட்டத்துக்கு வந்துவிட்டோம். நாம் சொந்தமாக யுத்த டாங்குகளைத் தயாரிக்க ஆரம்பித்துவிட்டோம். உதாரணமாக அர்ஜுனை.....

கேள்வி: எந்த அளவுக்கு அது இந்தியத் தயாரிப்பு என்று என் பதின்மூன்று வயது மகன் அறிய விரும்புகிறான்!

சுந்தர்ஜி: இஞ்சின் என்ற ஒரே ஒரு அம்சம் தவிர மற்றபடி அது முழுக்க முழுக்க இந்தியத் தயாரிப்புத்தான். இந்தியரால் வரைபடமாக்கப்பட்ட இந்தியக் கற்பனை அது. இந்தியத் தயாரிப்புக்களான பல்வேறு பாகங்களைக் கொண்டது — இஞ்ஜின் தவிர. இந்திய இஞ்ஜின்கள் தரமானதாக உருவாக இன்னும் ஓராண்டு காலம் ஆகலாம். எனவே அது மட்டும்தான் வெளி நாட்டுச் சரக்கு. ஆனால் இஞ்ஜின் மட்டும் டாங்காகிவிடாது. மற்ற எல்லா பாகங்களும் மிக மிக முக்கியமானவை. அவற்றிற்கு நுணுக்கமான தயாரிப்புத் திறன் தேவை. நான் மிகவும் பெருமையுடன் இதைப் பற்றிச் சொல்வேன். அது ஓர் அற்புதமான டாங்க். இதைவிட மேலானதாக நாங்கள் தயாரிக்கப் போகும் டி—72 இருக்கும். அதற்கடுத்த தயாரிப்பு அதைவிட மேலானதாக இருக்கும். துப்பாக்கி, பீரங்கிகளைப் பொருத்தமட்டில் இன்று ஃபீல்ட் கன்ஸ் என்னும் பீரங்கிகள் தயாரிக்கிறோம். மார்க்—1, மார்க்—2, எல்லாம் முதல் தரமான துப்பாக்கிகள். மார்க்—1ல் ஆரம்பத்தில் சில கோளாறுகள் இருந்தன. பிறகு அதுவும் சரி செய்யப்பட்டது. 155 மி.மீ. பீரங்கிகளை வெளியிலிருந்து வாங்குவதற்கான ஏற்பாடுகள் நடப்பது உண்மைதான். நம்மால் அவற்றை உற்பத்தி செய்ய முடியாது என்கிற காரணத்தால் அல்ல. நமது நிபுணர்கள் வேறு ஆயுதங்கள் தயாரிப்பதில் ஈடுபட வேண்டியிருப்பதால், இந்தப் பீரங்கிகளின் உற்பத்தியை ஒத்திப் போட வேண்டியிருக்கிறது. ஏவு கணைகளைப் பொறுத்தவரை டாங்குகளுக்கு எதிராகப் பயன்படுத்த நாம் தயாரிக்கும் 'ஆன்டி டாங்க் கைடட் மிஸ்—ஸைல்ஸ்' முதல்தரமானவை. நமது விஞ்ஞானிகள் மிக நவீனமான ஏவுகணை ரகத்துக்கு ஆயத்தம் செய்து கொண்டிருக்கிறார்கள். அது தயாராகும்போது அது உலகத்தில் சிறந்த ஒன்றாக இருக்கும். நமது விஞ்ஞானிகள் மிகச் சிறப்பாகக் காரியம் செய்து கொண்டிருக்கிறார்கள். நான் உங்களுக்கு எல்லா விவரங்களையும் சொல்ல முடியாது. ஆனால் திட்டவட்டமாக ஒரு விஷயம் கூற முடியும். நமது தரம் மிக உயர்ந்தது. அடுத்த பத்து ஆண்டுகளில் ராணுவத்தின் எல்லா அம்சங்களிலும் மேலும் வியக்கத்தக்க முன்னேற்றங்கள் ஏற்படப்போகின்றன.

கேள்வி: மகிழ்ச்சி. வாழ்த்துக்கள்.....! நாம் அடிக்கடி எல்லைப் புற சச்சரவுகளைப் பற்றிக் கேள்விப்படுகிறோம். எதனால் இவை ஏற்படுகின்றன? எல்லைப் புற பாதுகாப்புப் படையின் கவனக் குறைவினாலா?

சுந்தர்ஜி: இந்தக் கேள்வியை நான் இரண்டாகப் பிரிக்க வேண்டும். எல்லைப்புறப் பாதுகாப்புப் படை (B.S.F.) ராணுவத்தின் கீழ் இல்லை. அதாவது ஜம்மு—காஷ்மீரில் உள்ள சில பிரிவுகளைத் தவிர. அதனால் நான் எல்லைப் பாதுகாப்புப் படையின் திறனைப் பற்றிச் சொல்லவோ அல்லது விவாதிக்கவோ கூடிய நிலையில் இல்லை. இரண்டாவது அம்சத்தைப் பார்க்கலாம். எல்லைப்புற சச்சரவுகளைப்பற்றிச்சொன்னீர்கள். இவற்றைச் சச்சரவுகள் என்று சொல்வது தவறு. எல்லைக் கோட்டின் இருபுறமும் காவல் காப்பவர்களிடையே ஏற்படக் கூடிய வெகு மாமூலான, சாதாரண மோதல்கள் இவை. பார்க்கப் போனால் மோதல்கள்கூட இல்லை. ஒரு நாயோ ஆடோ எருமையோ எல்லை கடந்து உள்ளே நுழைந்தாலும் இந்தப் பக்கத்தில் இருப்பவன் சுடுவான். அதற்குப் பதில் சொல்வது போல் மறுபுறத்திலும் துப்பாக்கி வெடிக்கும். இந்தச் சின்ன மோதல்கள் உடனுக்குடன் தீர்க்கப்பட்டுவிடும்.

கேள்வி: ராஜீவ் காந்தியின் தேசப் பாதுகாப்புக் கொள்கை பற்றி என்ன நினைக்கிறீர்கள்? அவருடைய அணுகுமுறை பற்றி என்ன கருத்து?

சுந்தர்ஜி: மிக ஆக்கபூர்வமான அணுகுமுறையாகப்படுகிறது. விஷயங்களை யதார்த்த நிலையில் பார்க்கவும் தெளிவாக அலசவும், தவறுகளை ஒப்புக் கொள்ளவும், அவற்றைச் சீர்திருத்த உடனடியாக முடிவெடுக்கவும், புதிய மந்திரிசபை தயாராக இருக்கிறது. இதுவே பரபரப்பூட்டுவதாக உள்ளது. மொத்தத்தில் ஓர் உற்சாகமும் உத்வேகமும் இருப்பதாக எனக்குப் படுகிறது. இத்தகைய கால கட்டத்தில் ராணுவத்திற்குத் தலைமை தாங்க நேர்ந்திருப்பதை எனது மிகப் பெரிய அதிர்ஷ்டமாகக் கருதுகிறேன். மொத்த மந்திரிசபையும் இப்பொழுது காட்டும் ஓர் ஆக்கப்பூர்வமான ஆர்வத்தை நான் ராணுவத் தளபதி என்கிற முறையில் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளாமல் போனால் — நான் எதையும் சாதிக்கவில்லையானால் — குற்றம் முழுக்க முழுக்க என்னுடையதுதானே தவிர வேறு யாரும் காரணமாக முடியாது. சூழ்நிலை இன்று அத்தனை சாதகமானதாக இருக்கிறது.

கேள்வி: ராணுவத்தைப் பற்றிப் பொது மக்களுக்குத் தெரியாதது என்ன, தெரிய வேண்டியது என்ன?

சுந்தர்ஜி: இதற்குப் பதில் சொல்வது கஷ்டம். அவர்களுக்கு என்ன தெரியாது என்ன தெரியும்என்பது எனக்குத்தெரியாது. ஆனால் அவர்கள் எங்களைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறதோ அதைச் சொல்ல முடியும். ராணுவத்தில் வேலையாக இருப்பவருக்கு அதிக புத்திசாலித்தனம் தேவையில்லை, அவர்களுக்கு அறிவார்ந்த விஷயங்களில் ஈடுபாடு இல்லை, இந்த வேலைக்கு உடல் வலு ஒன்றுதான் தேவை. கூலியாக வாழ்வு நடத்துபவர்கள் என்கிற எண்ணம் பொது ஜனங்களுக்கு இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. இந்த என் எண்ணம் உண்மையாயின் மக்களுடைய அந்தக் கருத்து தவறானது; மேலெழுந்தவாரியான அபிப்ராயம்; உண்மை நிலை அறியாத காரணத்தால் உருவான எண்ணம் என்பதை வலியுறுத்த விரும்புகிறேன். தவிர, நமது தேசப் பாதுகாப்புக் கொள்கைகள் பற்றி அறிவார்ந்த — புத்திசாலித்தனமான விவாதங்கள், சர்ச்சைகள் நடப்பதேயில்லை. மேல் நாடுகளில் இதைப் பற்றிய விவாதங்கள் நிறைய நடைபெறுகின்றன. நமது நாட்டில் மிகக் குறைவு; அநேகமாக இல்லை என்றே கூறிவிடலாம்.

(பேட்டிக்குத்தரப்பட்டிருந்தகால அளவையும் கடந்து வெகுநேரம் பேசிக் கொண்டிருந்து விட்டதை உணர்ந்து நான் எழுந்து, நன்றி தெரிவித்து விட்டு விடை பெற்றேன். பேட்டி தொடங்கிய போது சுந்தர்ஜி வட ஆர்காடுமாவட்டத்தைச்சேர்ந்தவர்;பள்ளிப் படிப்பையும், கல்லூரிப் படிப்பையும் சென்னையில் (கிறிஸ்துவக் கல்லூரி) முடித்தவர்; தமிழர் என்ற பெருமிதத்துடன் இருந்தேன். விடைபெறும்போதோ அவரை ஒரு தமிழராக மட்டுமின்றித் தேச பக்தி மிக்க இந்தியராகவும் உணர்ந்து இரட்டிப்புப் பெருமிதத்துடன் இருந்தேன்.)

## வாணி சுந்தர்ஜி
## — ஓர் இனிய ஆச்சரியம்!

சுந்தர்ஜியின் மனைவி வாணி ஓர் இனிய ஆச்சரியம். எளிய — துவைத்த கலாக்ஷேத்திராக் கைத்தறி நூல் புடவையில், சிரித்த முகத்துடன் வெகு நாட்கள் பழகிய தோழிபோல் அவர் என்னை வரவேற்ற தருணத்தில் அவர் வித்தியாசமானவர் என்று புரிந்தது. நாட்டின் பிரதம ராணுவ அதிகாரியின் மனைவியிடம் எதிர்பார்க்கக் கூடிய மிடுக்கோ, பந்தாவோ கொஞ்சம்கூட இல்லை.

பேச ஆரம்பித்ததும் என் வியப்பு இன்னும் அதிகரித்தது. அவரைப் பேட்டி காணச் சென்ற நினைப்பே எனக்கு மறந்து போயிற்று. ஆகாசத்திலிருந்து பூமிவரையுள்ள பல விஷயங்களைப் பற்றிய சம்பாஷணையாக அது விரிந்தது. வான இயல், சுற்றுப்புறத் தூய்மை, மிருகங்கள், பறவைகள், இயற்கை — இவற்றைப்பற்றியெல்லாம் அவர் மாறாதபுன்னகையுடன் அறிவுபூர்வமாகப் பேசும்போது ஒரு குழந்தைத்தனமான ஆர்வம் புலனாயிற்று.

''சுந்தர்ஜியின் பெயரில் 'ஜி' எப்பொழுது சேர்ந்து கொண்டது? வடக்கே இருந்த காரணத்தாலா?'' என்று கேட்டேன்.

''இல்லை, இல்லை.'' என்று அவர் சிரித்தார். ''சென்னையில் பள்ளியில் சேர்க்கப்படும் போதே, தம் பெயர் 'சுந்தர்ஜி' என்றுதான் இருக்க வேண்டும் என்று பெற்றோர்களிடம் சொல்லி, பெயரைத் தாமே அப்படிப் பதிவு செய்து கொண்டாராம்!''

''நான் சற்று முன் அவரை முழுக்க முழுக்க ஒரு ராணுவத் தளபதியாகச் சந்தித்தேன். சாதாரண வாழ்க்கையில் அவர் எப்படிப்பட்ட மனிதர்?'' என்றேன்.

''அற்புதமான மனிதர்! நான் அவருடைய மனைவி என்கிற காரணத்தால் சொல்லவில்லை. ஒரு மூன்றாம் மனுஷியாக எட்ட நின்று பார்க்கும் போது கூட, என் வாழ்நாளில் நான் சந்தித்துள்ள மனிதர்களில் சிறந்த அறிவும், மனமும் கொண்ட ஒருவராக அவர் தென்படுகிறார். மிகக் கடுமையான உழைப்பாளி. சாப்பாட்டு நேரம், தூக்க நேரம் இவற்றைப் பற்றிய சிந்தனையேயில்லாமல் உழைப்பார். அதற்காக மற்றவர்களுக்காக நேரம் ஒதுக்காமல் இருக்க மாட்டார். அவருடன் சகஜமாகப் பேசிக் கொண்டிருக்கும்போது நீங்கள் சிரிப்பில் வெடிக்



வாஸந்தி பேட்டி ஜெனரல் கிருஷ்ணசா

காமல் இருக்க முடியாது. எனக்கும் அவருக்கும் இடையே இருக்கும் பிணைப்பை எப்படி விவரிப்பது? கருத்துப் பரிமாற்றத்துக்கு அவசியம் இன்றியே அவர் நினைப்பதை நானும், நான் நினைப்பதை அவரும் உணர்ந்து கொள்வது எங்களுக்கே பல சமயம் ஆச்சரியமளித்திருக்கிறது. இந்தப் பிணைப்பிற்கு நான் ஆண்டவனுக்குத்தான் நன்றி சொல்லவேண்டும்.

''உங்களுக்கு எத்தனை குழந்தைகள்? குழந்தைகளிடம் அவர் எப்படி நடந்து கொள்வார்?''

''நான்கு குழந்தைகள். மிக சகஜமாகப் பழகுவார். அவர் தம் கையாலேயே ஸ்பெஷலாக மிளகாய்ப் பொடி செய்வார். அது குழந்தைகளுக்கு ரொம்பப் பிடிக்கும்! குழந்தைகளுடன் விளையாடும் போது அவரும் குழந்தையாகிவிடுவார். தோட்டக்கலையில் அவருக்கு மிகவும் ஆர்வம். முக்கியமாக ரோஜா வளர்ப்பதில். கர்னாடக சங்கீதமோ, ஹிந்துஸ்தானியோ, மேற்கத்திய இசையோ எதுவானாலும் அதில் முழு ஈடுபாடு உண்டு. எதுவுமே அரைகுறையில்லை. இப்பொழுது பறவைகளிலும், வான இயலிலும் எனக்குள்ள ஆர்வம் அவரையும் தொற்றிக்கொண்டிருக்கிறது.''

பேசிக்கொண்டிருக்கும்போது, இடையே திருமதி சுந்தர்ஜி பேச்சை நிறுத்தி, தோட்டத்தில் ஒவ்வொரு மலர்ச் செடியாகத் தாவிக்கொண்டிருந்த ஒரு தேன்சிட்டைக் குழந்தைத்தனமான மகிழ்ச்சி ஆரவாரத்துடன் சுட்டிக்காட்டி, ''அதோ பாருங்கள், எத்தனை அழகு!'' என்றார்.

திருமணத்துக்கு முன் லண்டனில் பல வருஷங்கள் இந்திய அரசாங்கத்தின் சுற்றுலாத் துறையின் இயக்குனராகப் பணியாற்றியிருக்கிறார் திருமதி சுந்தர்ஜி.

இன்று சுந்தர்ஜியின் மனைவியாக இருக்கும் காரணத்தாலேயே அவருக்குப் பல பொறுப்புக்கள் இருக்கின்றன. ராணுவ மனைவியர் நலன் சங்கத்துக்குத் தலைவராகப் பொறுப்பேற்கப் போகும் அவர் ஏற்கெனவே அந்தச் சங்கத்தில் பல வருஷங்களாக உழைத்து வந்திருப்பவர்.

''பொற்கோவிலில் ராணுவ நடவடிக்கையின்போது உங்களுக்குக் கவலையாக இருக்கவில்லையா?'' என்று கேட்டேன்.

''இல்லை!'' என்று அவர் சின்னப் பெண்ணைப் போல் சிரித்தார். ''என் கணவர் மேலும் கடவுள் மேலும் எனக்கு அபார நம்பிக்கை.

''நீங்கள் நான் கர்வமில்லாமல், பந்தா இல்லாமல் பழகுவதாகச் சொல்கிறீர்கள். இது எனக்கு வேடிக்கையாக இருக்கிறது. அவருக்கே பந்தாவெல்லாம் இல்லை. ஜூனியர் அதிகாரிகளுடன், ஜவான்களுடன் தோள்மேல் கைபோட்டுக் கொண்டு அணைத்தபடி பேசுவார். அவர்கள் கேட்காமலே அவர்களது குறைகளைக் கண்டறிந்து உதவுவார். பார்க்கப் போனால் பந்தா



வைத்துக் கொள்ளும்படி நமக்கு என்ன இருக்கிறது? என் தந்தை எனக்குச் சின்ன வயசிலிருந்து வான இயலில் ஓர் ஆர்வத்தை ஏற்படுத்தினார். விண்வெளியின் அற்புதங்களையும் ரகசியங்களையும் பற்றிப் படிக்கப் படிக்க, இந்தப் பிரபஞ்சத்தில் நாம் ஒரு சிறு தூசு என்று புரிய வரும். அவ்வாறிருக்க, நாம் நாமாக இருந்தால் போதாதா? கர்வத்தைச் சுமப்பது எத்தனை முட்டாள்தனம்?''

நான் ஆட்கொள்ளப்பட்டவளாக வாணி சுந்தர்ஜியைப் பார்த்தபடி அமர்ந்திருந்தேன். முகத்தின் பிரசன்னத்தில் சின்னப் பெண்ணின் மென்மை இருந்தது. கிளைக்குக் கிளைத் தாவும் பட்சியின்மேல் பதிந்த பார்வையில் குழந்தைத்தன மகிழ்ச்சி இருந்தது. தெளிந்த அறிவோடு இவை சேரும்போது தான் விநயமும் உருவாவதாகத் தோன்றிற்று.

சுந்தர்ஜியின் தன்னம்பிக்கைக்கு ஆதார சுருதி எங்கே என்று கண்டு கொண்ட திருப்தியுடன் நான் எழுந்தேன்.

— வாஸந்தி.

புகைப்படங்கள்: டில்லி ராஜூ, ரகுபீர் சிங்

## 4. தாய்லாந்துப் பெண்கள்: இழிவு படுத்தப்படும் அடிமைகள்!

திருமதி சாஸ்திரி, பாட்பாங்க் பற்றிக் கூறிய பிறகு, அங்கு பெண்கள் இழிவுபடுத்தப்படுவதைப் பற்றி நான் அறிந்த பிறகு, எனக்கு அந்தத் தெருவை நேரில் சென்று பார்க்கத் தோன்றியது. வெறும் கேள்வி ஞானத்தால் மட்டும் ஒரு விஷயத்தின் பயங்கரத்தைப் புரிந்து கொள்ள முடியாது என்று பட்டது. ரங்கராஜன் நெருங்கிய நண்பரானாலும் அவரிடம் இதைச்

# கிழக்கே



* சுதந்திரம் இல்லாதபோது அழகும் அலங்காரமும் என்ன பயன்?

சொல்லத் தயக்கமாக இருந்தது.

சாப்பாடு முடிந்து வீடு திரும்புகையில், "ஒருவேளை பாட்பாங்க்குக்கு நீங்கள் நேரில் சென்று பார்க்க விரும்பினால் அழைத்துப் போகிறேன்" என்று ரங்கராஜன் சொன்ன போது, என் செவிகளை ஒரு விநாடி நம்ப முடியவில்லை.

"என் மனத்தில் இருப்பது எப்படி உங்களுக்குத் தெரிந்தது?"

"நீங்கள் எழுத்தாளராயிற்றே. அதனால் ஒரு நாட்டின் நல்லது கெட்டது இரண்டையும் தெரிந்து கொள்ள விரும்பலாம் என்று நினைத்தேன்" என்றார்.

"சரி, போகலாம்" என்றேன்.

"பிரதான தெருவில் வண்டியை நிறுத்தி விட்டுப் பாட்பாங்க் தெருவுக்கு நடந்து போகலாம்" என்றார் ரங்கராஜன். "அங்கே வண்டியை எடுத்துப் போவது அவ்வளவு பாதுகாப்பில்லை." அவ்விதமே பாட்பாங்கை நோக்கி நடந்தோம்.

"விபசாரம் இங்கு சட்டப்படி குற்றம். அரசாங்கத்தின் சொல்படி இங்கே விபசாரம் என்பதே கிடையாது!" என்றார் ரங்கராஜன்.

நான் குழப்பத்துடன் சிரித்தேன். "பின்னே இங்கே நடப்பதெல்லாம் என்ன? ரெட் லைட் ஏரியா இது என்று எல்லாருக்கும் தெரியுமே!"

"எல்லாருக்கும் தெரியும். ஆனால் அரசாங்கம் இங்கே விபசாரமே இல்லை என்று தான் வாதம் புரிகிறது! எப்பொழுதாவது திடீர் என்று இந்தத் தெருவை ரெய்ட் செய்வார்கள். சில பேர்கள் பிடிபடுவார்கள். அதோடு சரி. ரெட் லைட் ஏரியா என்று பகிரங்கமாகச் சொல்ல மாட்டார்கள். மஸாஜ் பார்லர், ஃப்ளோர் ஷோஸ் என்பார்கள். உண்மையில் எல்லாம் விபசார விடுதிகள் தான். அரசாங்கத்துக்குத் தெரியும். கண்டு கொள்ளாமல் இருக்கிறது. இத்தனைக்கும் இப்பொழுது இருக்கும் கலாசார மந்திரி ஒரு மடிசஞ்சி என்று பெயர். இந்தப் பகுதி அயல்நாட்டு டூரிஸ்டுகளைக் கவர்ந்திழுக்கிறது. அதனால் அந்நியச் செலாவணி கிடைக்கிறது என்பதால் பேசாமல் இருக்கிறார்கள். விபசாரம் சட்டப்படி குற்றம் என்பதால் இந்தப் பெண்களுக்கெல்லாம் ஒரு பாதுகாப்பும் இல்லை. மேற்கத்திய நாடுகளில் இருப்பது போல் மருத்துவ இன்ஷ்யூரன்ஸ் கிடையாது. வியாதி வந்து படுத்தால் அரசாங்கம் கண்டு விரலைக் கூட உயர்த்தாது."

பாட்பாங்க் தெருவை அடைந்தபோது மணி பதினொன்று. அதிக அகலமில்லாத பழைய காலத்துத் தெரு. 'ஜே ஜே' என்றிருந்தது.

"முதலில் மஸாஜ் பார்லருக்குப் போகலாம். அதெல்லாம் ஒரு பக்கமாக இருக்கும்," என்ற ரங்கராஜனை நான் பின் தொடர்ந்தேன்.

ஓர் இடத்துக்குச் சென்றோம். அநேகமாய் எல்லாக் கதவுகளும் மூடியேயிருந்தன. கதவுக்கு வெளியே நிற்கும் ஆள் தெருவில் நடப்பவர்களை ஏக உபசாரம் செய்து உள்ளே அழைத்தான்:

"மஸாஜ் செய்து கொள்ளுங்கள். உங்கள் களைப்பெல்லாம் போகும்."

அவனுடைய உபசாரமெல்லாம் ரங்கராஜனுக்குத்தான். என்னை அவன் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை.

சிவப்புக் கம்பளம் விரித்திருந்த படிகளின் மேல் நான் அவர்களைத் தொடர்ந்து மௌனமாகச் சென்றேன்.

"உங்களுக்குக் கை மஸாஜ் வேண்டுமா, உடல் மஸாஜ் வேண்டுமா என்று தீர்மா

# ஓர் உலகம்

னித்துக் கொண்டு ஆளைப் பொறுக்கிக் கொள்ளலாம்'' என்றான் அவன், மாடியை அடைந்ததும்.

சட்டென்று நான் துணுக்குற்று நின்றேன். பார்வையைத் தாக்குகிறாற்போல் இரண்டு பெரிய கண்ணாடிக் கூண்டுகள் இருந்தன. கண்ணாடி அறைகள் என்பதை விடக் கூண்டுகள் என்பதுதான் சரி. ஒரு பகுதியில் கையால் மஸாஜ் செய்பவர்கள் ஆளுக்கொரு நம்பர் பிளேட்டைக் கழுத்தில் மாட்டிக் கொண்டு, சுமாராக உடலை மூடிய உடையுடன் கொலுப்படியில் உட்கார்ந்திருக்கும் பொம்மைகள் போல் உட்கார்ந்திருந்தார்கள். கண்ணாடிச் சுவரில் வெளியே கை மஸாஜ் 175 பாத் என்று எழுதியிருந்தது.

அடுத்த கூண்டில் அதே மாதிரி கொலுப்படி. ஆனால் வெறும் உள்ளாடையில் கஷ்குமுஷ்குப் பெண்கள். நம்பர் ப்ளேட் கழுத்தில் தொங்கியது. கண்ணாடிச் சுவருக்கப்பால் நாய்களைப் போல் வெறித்துக் கொண்டு நிற்கும் ஆண்களைப் பார்வையாலும் புன்னகையாலும் உடம்பின் மதர்ப்பைக் காட்டியும் துளைக்கப் பார்த்தார்கள். இவர்கள் உடலால் மஸாஜ் செய்பவர்கள். அதற்குக் கூலி 250 பாத்!

என்னுடைய நாபியிலிருந்து ஒரு ஆக்ரோஷமும் துக்கமும் அவமானமும் எழும்பிக் கன்னமெல்லாம் சூடேறிப் போயிற்று. வெளியில் நின்றிருந்த இரண்டு பாகிஸ்தானியர் தங்களுக்குப் பிடித்த நம்பர்களைச் சுட்டிக் காட்டுகையில் நானும் ரங்கராஜனும் படியில் இறங்கி வெளியே வந்தோம்.

வாயே திறக்காமல் அவரைத் தொடர்ந்து நான் தெருவில் நடந்தேன். பேச வார்த்தைகள் வராமல் நெஞ்சை ஏதோ அடைத்தது.

ஃப்ளோர் ஷோக்கள் நடக்கும் தெருவை, விளம்பரம் தேவைப்படாத பூக்கடைகள் மாதிரி சற்றுத் தொலைவிலிருந்தே வாத்திய இசையினாலும் ட்ரம்களின் ஓசையினாலும் கண் சிமிட்டும் கலர் கலர் விளக்குகளினாலும் இனம் கண்டுகொள்ள முடிந்தது. தெருவில் காலடி வைத்ததும் எனக்கு மறுபடி திகைப்பு ஏற்பட்டது. நடைபாதையை ஒட்டினாற்போல் லாட்ஜ் அறைகள் போல அடுத்தடுத்துக் கதவுகள் இருந்தன. மிக லேசாகத் திறந்திருந்த கதவுகள் வழியே பார்த்தபோது அரங்கத்தில் அரைகுறை ஆடையுடன் பெண்கள் வாத்திய இசைக்கு நாட்டியமாடுவது தெருவிலிருந்தே தெரிந்தது. ஒவ்வொரு கதவின் முன்னாலும் ஓர் ஆள். — இன்னும் மீசை கூட முளைக்காத இளைஞன் — நின்றிருந்தான். தெருவில் நடக்கும் ஆண்களை ஒவ்வொருத்தனாக ஷர்ட்டைப் பிடித்து இழுத்து,

''உள்ளே வந்து பாருங்கள். அழகிய பெண்கள். இன்றைக்கு நல்ல நல்ல கேளிக்கைகள் உண்டு,'' என்று ஆசை காட்டினான்.

ரங்கராஜனின் புஷ் ஷர்ட்டின் ஒரு கை பிய்ந்தே விடுமோ என்று எனக்குக் கவலையாகப் போயிற்று!

இந்த ஃப்ளோர் ஷோவையும் பார்த்து விடுவது என்கிற தீர்மானத்துடன் ஒரு வாசலுக்குள் நுழைந்தோம்.

ஆசார உபசாரத்துடன் ஒருத்தன் எங்களை உள்ளே அழைத்துப் போனான். ஓர் அடக்கமான கூடத்தில் நடு மையத்தில் ஒரு மேடை. அதன் நான்கு திசையிலும் நான்கு பெண்கள் வெறும் உள்ளாடைகளுடன் நின்றிருந்தார்கள். பின்னணி இசைக்குத் தகுந்தாற்போல் நாட்டியமாடிக் கொண்டிருந்தார்கள். மேடையைச் சுற்றி வட்டமாகக் கீழிருந்து மேலாக உயரும் காலரி ஸீட்டுகள். ஆசனங்களில் அநேகமாக வெள்ளைக்கார டூரிஸ்டுகள் உட்கார்ந்திருந்தார்கள். என்னைப் போல் 'வேடிக்கை' பார்த்து வேதனைப்பட வந்த சில வெள்ளைக்காரப் பெண்மணிகளும் இருந்தார்கள். மதுபானங்களை வழங்கிக் கொண்டு நிறைய பெண்கள் வளைய வந்தார்கள். வயதிலும் அந்தஸ்திலும் உயர்ந்தவளைப் போல, தலைவியைப் போல ஒருத்தி, 'யார் சரியான வேட்டை' என்று நோட்டம் பார்க்கச் செய்துகொண்டிருந்த சாகஸங்களை சினிமாவில் பார்த்திருந்தால் நான் நம்பியிருக்க மாட்டேன். பெண்களை டைரக்டர் கேவலப்படுத்துகிறார் என்று கோபப்பட்டிருப்பேன். நேரில் பார்க்க நேர்ந்த போது காரணம் புரியாத துயரம் ஏற்பட்டது. 'இவர்கள் போடும் இந்த வேஷங்களுக்குப் பின்னால் இருக்கும் நிதர்சனமான நிர்ப்பந்தங்களுக்கு இவர்கள் பொறுப்பாக இருக்க முடியுமா?' என்று திரும்பத் திரும்பக் கேள்வி எழுந்தது. மேடைமேல் இருந்த பெண்கள், பதின்மூன்று பதினாலு வயது கூட முடியாத குழந்தைகளாகத் தோன்றினார்கள். பருவமடைந்த உடல்வாகு இருந்தாலும் இன்னும் பால்முகமாக இருந்தது. இது என் சரீரம் என்கிற பிரக்ஞையே இல்லாத ஒரு செயற்கைப் புன்னகையுடன் (அவர்கள் முகத்தில் விரசகாம பாவமே இல்லை.) இயந்திர கதியில் தங்களது சொற்ப ஆடைகளையும் களைந்து நிர்வாணமாக ஆடினார்கள். மிக மென்மையான தங்கள் உடல்களினால் அவர்கள் அடுக்கடுக்காகச் செய்து காட்டிய வித்தைகளை நான் ஜீரணிக்க முடியாத ஒரு துயரத்துடன்

வாஸந்தி

பார்த்தேன். வயிற்றுப் பாட்டுக்காகவோ வேறு எந்த நிர்ப்பந்தங்களுக்காகவோ அந்தக் குழந்தைகள் தங்களை ஜடப் பொருள்களாக்கிக் கொண்டிருக்கிறார்களா, அல்லது தாங்களும் தங்கள் இனமும் இழிவு படுத்தப்படும் உணர்வே இல்லாத கலாசாரப் பின்னணிக்கு அவர்கள் பலி ஆனவர்களா என்று எனக்கு விசனமேற்பட்டது. உலகத்தில் வேறு எந்தப் பாகத்திலும் இந்த மாதிரி விடுதிகளில் இல்லாத வக்கிரக் கேளிக்கைகள் இங்கே காண்பிக்கப்படுகின்றன. அவற்றை ஞாபகப் படுத்திக் கொண்டு எழுதுவதே ஒரு துயரத்தையும், கோபத்தையும் அருவருப்பையும் என்னுள் ஏற்படுத்துகின்றன. இவற்றைப் பார்த்து ஒருத்தனுக்குக் கிளுகிளுப்பு ஏற்பட்டதென்றால் அவன் நிச்சயம் நாகரிக மனிதன் அல்ல. ஒரு வக்கரித்துப் போன வெறியனாக, மிருகமாகத்தான் இருக்க வேண்டும்.

பதிமூன்று பதினைந்து வயதில் இப்படி உடலைக் கேவலப்படுத்திப் பிழைப்பு நடத்த வேண்டிய நிலையில் உள்ள இவர்களது எதிர்காலம் எப்படியிருக்கும்? தன்மான உணர்வு என்பதை என்றாவது இவர்களால் உணர்ந்து கொள்ள முடியுமா? வியாதி வந்து படுத்தால், (அவர்கள் செய்யும் வித்தைகளைப் பார்க்கும் போது, வியாதியிலிருந்து நிச்சயம் தப்ப முடியாது என்று தோன்றிற்று) சிந்துவார் யாருமில்லாமல், பாதுகாப்பில்லாமல் நாய்களை விடக் கேவலமாகப் போக வேண்டிய நிலையை இவர்கள் உணர்ந்திருக்கிறார்களா?

விபசாரத் தொழில் நடத்தாத சமூகமே இல்லைதான். ஆனால் பெண்ணின் உடலை, பழிவாங்கும் குரூரத்துடன் அவமதிக்கும் வக்கிரத்தைத் தாய்லாந்தில் மட்டுமே காண முடியும் என்று தோன்றிற்று. சற்று நேரத்துக்குமேல் அங்கே உட்கார்ந்திருக்க முடியாமல் ரங்கராஜனிடம் சைகை காண்பித்து விட்டு நான் எழுந்து வெளியே வந்தேன். மனத்துள் பொங்கிப் பொங்கி ஆர்ப்பரித்த ஆத்திரத்தை அடக்கத் தெரியாமல் தவித்தேன். சூடேறிப் போயிருந்த கன்னங்களில் வெளிக்காற்று சில்லென்று பட்டபோது, ஒரு விஷயம் பளிச்சென்று புரிந்தது. இது நிச்சயமாக நன்கு நிர்வகிக்கப்படுகிற ஒரு மோசடி. இதில் சிக்கியிருக்கும் பெண்கள் அடிமைகள். வாயைத் திறக்கவோ, எதிர்க்கவோ இவர்களுக்குச் சுதந்திரமில்லை. இங்கிருக்கும் ராணுவ அரசாங்கத்துக்கு இவர்கள் ஒரு சுலபமான மூலதனம். பெண்களை அடக்கியே வாழ்ந்து துச்சமாகக் கருதி வந்த ஆண் ஆளுமை கொண்ட கலாசாரம் இங்கு நிலவுகிறது. தாய்லாந்தில் ஒரு மனைவி சம அந்தஸ்துடன் புருஷனுடன் வாழ்ந்து குடித்தனம் நடத்த முடியாது. ராணுவ அரசை எதிர்த்து இந்தப் பெண்கள் போராட முடியாது. அரசு இதை அனுமதிப்பது மட்டுமல்ல; இதை ஒழிக்க நடவடிக்கை எடுக்காததன் மூலம் மறைமுகமாக் இதை ஊக்குவிக்கவும் செய்கிறது; இந்த அநாகரிகத்தில் பங்கேற்கிறது. பத்திரிகை சுதந்திரம் இல்லாத நிலையில், எழுத்தும் இங்கே உயிரற்றுப் போயிற்று. எதிர்ப்பாரில்லை.

அந்தத் தருணத்தில் இந்திய மண்ணில் நமக்கிருக்கும் சுதந்திரத்தை நினைத்து மனத்தில் நன்றி பெருகிற்று. நான் நினைத்ததை எழுத, என் கோபத்தை வடிக்க, என் பேனாவிற்கு இருக்கும் சுதந்திரத்துக்காக நன்றி பெருகிற்று. எத்தனை வசதிக் குறைவாக இருந்தாலும் நான் வாழும் வாழ்க்கை எனக்கேதான் சொந்தம் என்ற நிலை எவ்வளவு உயர்வானது!

“உங்களுக்கு அடங்கிய மனைவி வேண்டுமா? தாய்லாந்துப் பெண்களை விடச் சிறந்த மனைவிகள் கிடைக்க மாட்டார்கள். எங்கள் அலுவலகத்துக்கு விண்ணப்பியுங்கள்’ என்ற விளம்பரங்கள் ஐரோப்பிய, அமெரிக்க ஆண்களின் பார்வைக்காக இங்கே நாளிதழ்களில் வருகின்றன. இதுவும் ஒரு தேர்ந்த அடிமை வியாபாரம் என்று புரிந்தது.

மனத்தை அழுத்திய துயரத்திலும் என்னையே யாரோ கேவலப்படுத்தி விட்டாற் போல ஏற்பட்டிருந்த கூச்சத்திலும் என்னால் ரங்கராஜனுடன் அதிகம் பேச முடியவில்லை.

“எத்தனை சின்னப் பெண்கள்!” என்று மட்டும் புலம்பினேன்.

“முக்கால்வாசி கிராமங்களிலிருந்து வந்திருக்கும் பெண்கள். பட்டணத்தில் ஏதோ வேலை கிடைக்கும் என்று எதிர்பார்த்து வந்து, கடைசியில் இங்கே மாட்டிக் கொண்டவர்கள்!” என்றார் ரங்கராஜன்.

‘இவர்கள் எல்லாம் வரவழைக்கப்பட்டவர்கள், இவர்களாக வந்திருக்க முடியாது’ என்று நான் நினைத்துக் கொண்டேன்.

“காரியாலயங்களில் வேலை செய்யும் பெண்கள் கூட இரவில் இப்படிச் சம்பாதிக்கிறார்கள். நாள் முழுவதும் உழைத்துக் கிடைக்கும் ஊதியத்தை விட இதனால் அதிகம் கிடைக்கிறது. சுலபமான சம்பாத்தியம்!”

அவருடைய சுலபமான வார்த்தைகளை என்னால் ஜீரணிக்க முடியவில்லை. ‘பெண்களின் இந்த இழி நிலைக்குச் சமூகம்தான் காரணம் என்று சொன்னால் இவர் ஒப்புக் கொள்வாரா?’ என்ற யோசனையுடன் நான் காரில் அமர்ந்தேன்.

(தொடரும்)

“உங்களுக்குத் தமிழ் மேல பற்று இருக்கலாம். அதுக்காக, ‘ஏன் லேட்’ னு கேட்டா ‘பேருந்தைச் செல்வியாக்கி விட்டேன்’கிறது நல்லாயில்லே.”

“சாரி சார்! பஸ்ஸை மிஸ் பண்ணிட்டேன்.”

— த. ச. நடராசன்.



# சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு பற்றி சோ எழுதியது சரிதானா?

நீங்கள் கேட்டவை — தராசு



"வாங்கமாட்டோம்!"



பெரிய பதவியா?



"தன்னடிப் தோற்றது!"



பாராட்டுக்குரியவர்



எம்.ஜி.ஆர். மட்டும்தானா?

* **ஆர். அப்துல் சலாம், திருச்சி—20.**

? **பொய்ச் செய்திகளை வெளியிடும் பத்திரிகைகளை வாங்குவதில்லையென அரசு முடிவு செய்துள்ளதாக அரங்கநாயகம் பேசியுள்ளாரே?**

! அப்படியானால் ஆளுங்கட்சிக்குத் துதி பாடும் எல்லாப் பத்திரிகைகளையும் நிறுத்த வேண்டியிருக்குமே; எப்படி வாங்காமல் இருக்க முடியும்!

* **கா. சேட்டு முகம்மது, விருத்தாசலம்.**

? **பிரதமர் ராஜீவ் காந்தி வால் நட்சத்திரத்தைப் பார்த்துள்ளாரே. அவருக்குத் தீங்கு ஏதும் ஏற்படுமா?**

! வால் நட்சத்திரம் தோன்றினால் நாட்டில் பெரிய விபரீதம் நடக்கும்; அதிலும் ராஜ பரம்பரையினருக்கு ஆபத்து விளையும் என்றுதான் சிலர் நம்புகிறார்கள். நீங்களோ அதைப் பார்ப்பது கூட ஆபத்து என்கிறீர்கள்! உலகில் இன்று கோடிக்கணக்கான மக்கள் வால் நட்சத்திரத்தைப் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். அவர்களுக்கு என்ன ஆபத்து வந்துவிடப்போகிறது? இதுபோன்ற கருத்துக்களெல்லாம் மனத்தைக் குழப்புகிறவை. இந்த அச்சுறுத்தல்களை நம்ப வேண்டாம், நண்பரே!

* **மு. மதிவாணன், அரூர்.**

? **'துப்பாக்கிக் குண்டும் தோல்வி கண்டது எம். ஜி. ஆரிடம்தான்' என்று ஆர். எம். வீரப்பன் பேசியிருக்கிறாரே?**

! துப்பாக்கிக் குண்டு மட்டும்தானா? சத்தியம், நேர்மை, ஊழலற்ற—திறமையான நிர்வாகம், மதுவிலக்குக் கொள்கை, சூதாட்டங்களை அழித்தொழிக்கும் முயற்சி... என்று எல்லாமே தோற்றுப் போனதும் எம். ஜி. ஆரிடம்தானே! அதை ஏன் விட்டுவிட்டார் வீரப்பன்? எம். ஜி. ஆருக்குப் புகழ்ச்சி பிடிக்காது என்ற அவையடக்கம் காரணமாகவா?

* **ஆனந்த், கொப்பம்பட்டி.**

? **ஏ. வி. எம். சரவணனுக்கு ஷெரீப் பதவி கொடுத்தது பற்றி?**

! சரவணன் பழகுவதற்கு இனிமையான, கண்ணியமான மனிதர். அப்பாவைப் போலவே நற்பணிகளுக்கு உதவுகிற நல்ல இயல்பு உள்ளவர். அவர் எடுத்த படங்களில் வசூலில் சாதனை கண்ட மோசமான படங்களும் உண்டு. பாக்ஸ் ஆஃபீஸில் தோல்வியுற்ற மிக நல்லத் திரைப்படங்களும் உண்டு. அப்படிப்பட்ட அவருக்குக் கொடுத்திருக்கும் ஷெரீப் பதவி அப்படி ஒன்றும் மிகப் பெரிய பதவி அல்ல. அது ஆண்டுதோறும் நடத்தப்படுகிற ஒரு சடங்கு மாதிரி ஆகிவிட்டது. சரவணன் அதற்கு முக்கியத்துவம் ஏற்படுகிற அளவில் ஏதும் சாதிக்க முடியுமானால் அவரை, 'ஓஹோஹோ' என்று கொண்டாடலாம்!

* **கா. க. வேலாயுதன், கோவை—16.**

? **இன்றைய திரைப்படங்கள் மக்களை எந்தப் பாதையில் இட்டுச் செல்கின்றன?**

! அண்ணா பாதையில்தான். அங்குதானே ஏகப்பட்ட தியேட்டர்கள் இருக்கின்றன!

* **க. தாணுமாலயப் பெருமாள், இடலாக்குடி.**

? **'என் மகளை நடிகையாக்க மாட்டேன். ஆனால் அவளே நடித்தால் தடுக்கவும் மாட்**

டேன்' என்று பாக்யராஜ் சொல்லியிருக்கிறாரே?

! ஒரு நல்ல தந்தை அப்படித்தான் சொல்ல வேண்டும்., அவள் மகளேயானாலும் நம்முடைய கருத்தை அவளுக்கு எடுத்துச் சொல்லலாமே தவிர, நமது எண்ணங்களையும், ஆசைகளையும் அவள் மீது திணிப்பது மாபெரும் குற்றம். பாக்யராஜின் கருத்து வரவேற்கப்பட வேண்டிய கருத்து.

* இரா. கந்தையா, ஆலடியூர். *

**? பதவியிலிருந்து ஓய்வு பெறும் அரசு அதிகாரிகள் சிலரை, அவர்கள் ஓய்வு பெறும் தினத்தன்று (சில சமயங்களில் டெலிபோன் மூலம்) தற்காலிக வேலை நீக்கம் செய்கிறதே அரசு, இது என்ன நியாயம்?**

! பதவியிலிருக்கும் ஓர் அதிகாரி மீது அரசு வழக்குத் தொடரவோ, நடவடிக்கை எடுக்கவோ எண்ணியிருந்தால் அவர் ஓய்வு பெற்றுவிட்ட பிறகு அம்மாதிரி நடவடிக்கை ஏதும் அவர் மீது எடுக்க முடியாமல் போய் விடும். அதற்காகத்தான் அப்படிப்பட்ட அதிகாரிகளை ஓய்வு பெறும் நாளன்று தற்காலிக வேலைநீக்கம் செய்வார்கள். இதை நாம் குறை சொல்ல முடியாது. ஆனால் சில நேர்மையான அதிகாரிகளைப் பழி வாங்குவதற்காகவும் சில சமயங்களில் இப்படிச் செய்கிறார்கள். அதுதான் கண்டிக்கத் தக்கது.

* இரா. சுவாமிநாதன், தென்பாதி.

**? பால்ராஜ் வழக்கில் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்திருப்பது சரியல்ல என்று சோ எழுதியிருப்பது பற்றி...?**

! சோ எழுதியிருப்பது சரிதான். பால்ராஜின் வழக்கே, சென்ற சட்டசபைக் கூட்டத் தொடரில் கொடுக்கப்பட்ட தண்டனையை உறுதிப்படுத்திச் செயல்படுத்த இந்தக் கூட்டத் தொடருக்கு அதிகாரம் இல்லை என்பதுதான். அதை இரண்டாம் பட்சமாக்கி, அது ஆராயப்பட வேண்டியதுதான்; ஆனால் இந்த வழக்கில் அல்ல என்று மழுப்பிவிட்டுச் சட்டசபை உறுப்பினர்களைப் பற்றிப் பால்ராஜ் எழுதிய தரக்குறைவான வார்த்தைகளை மட்டும் கண்டித்து, அவரது மனுவைத் தள்ளுபடி செய்து தீர்ப்புக் கூறியிருப்பதை வரவேற்க முடியவில்லை. இப்படி நாம் கூறுவதால் பால்ராஜ் தரக்குறைவான வார்த்தைகளைப் பிரயோகம் செய்ததைச் சரி என்று நாம் ஒப்புக் கொண்டதாகி விடாது.

* எஸ். கணேசன், பெருமாள்புரம்.

**? 'கிரிக்கெட் டெஸ்ட் மேட்சுகளை இனி டி. வி. யில் நேரடி ஒளிபரப்புச் செய்ய மாட்டோம்' என்று வி. என். காட்கில் கூறியிருப்பது பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?**

! டி. வி. யில் மட்டுமல்ல, ரேடியோவிலும் நேரடி ஒலிபரப்புச் செய்யாமலிருந்தால் உண்மையிலேயே அவரை மனம் திறந்து பாராட்டலாம். நேரடியாக ஒளி, ஒலி பரப்புகளைச் செய்து கொண்டிருப்பதால், அலுவலகங்களில் வேலை செய்பவர்களெல்லாம் மேட்ச் கமென்ட்ரி கேட்பதிலும் பார்ப்பதிலும்தான் நேரத்தைச் செலவிடுகிறார்களே தவிர, யாரும் அலுவலக வேலைகளைச் செய்வதில்லை. ஊழியர்களிடம் வேலை வாங்கும் பொறுப்பில் உள்ள அதிகாரிகள் கூட ஸ்கோர் கேட்டுத் தெரிந்து கொள்வதில்தான் ஆர்வம் காட்டுகிறார்கள் என்றால் ஊழியர்களைப் பற்றிக் கேட்பானேன்? இந்த அவலங்களால் எத்தனை மனித உழைப்பு நேரங்கள் வீணாகின்றன! எனவே, நேரடி ஒளி — ஒலி பரப்புகளைத் தூக்கியெறிந்துவிட்டு, மேட்சின் முக்கிய ஆட்டப் பகுதிகளை இரவு நேரங்களில் டி. வி. யிலும், ரேடியோவிலும் ஒளி, ஒலி பரப்புச் செய்வதுதான் நல்லது.

* எஸ். ஏ. கோவிந்தகுமார், நீடாமங்கலம்

**? 'ராமமூர்த்தியால் நடக்க முடியவில்லை கல்யாணசுந்தரத்தால் நிற்க முடியவில்லை பக்தவத்சலத்தால்நிற்கமுடியவில்லை. ஆனால் எம். ஜி. ஆரால் பேச முடியவில்லை என்பதை மட்டும் பெரிய விஷயமாக்குகிறார்கள்' என்று நெடுஞ்செழியன் பேசியிருக்கிறாரே?**

! முதலாவது: ராமமூர்த்தியோ, கல்யாணசுந்தரமோ, பக்தவத்சலமோ இப்போது தமிழக மக்களின் தலைவிதியை நிர்ணயிக்கும் முதல்வர் பொறுப்பில் இல்லை. இரண்டாவது: எம். ஜி. ஆர். அரசு சுறுசுறுப்பாகவும், நேர்மையாகவும் இயங்கிக் கொண்டிருந்து, தலைமைச் செயலகத்தில் எந்த ஃபைலும் தேங்கிக் கிடக்காமல் இருந்தால், எம். ஜி. ஆர். பேசாமலிருப்பதை யார் பெரிது படுத்தப் போகிறார்கள்? ஆட்சிப் பொறுப்பில் இருப்பவர் பேசுகிறாரா இல்லையா என்பது முக்கியமல்ல; அவரது செயலாற்றல்தான் விமரிசனத்துக்குள்ளாகிறது.

* எம். ஷர்புதீன், தோப்புத்துறை.

**? டெல்லி செய்தி வாசிப்பில் சரோஜ் நாராயண சாமி, ஜான் சுந்தர், சிவராமன் ஆகியோரில் யார் வாசிப்புப் பிடிக்கும்?**

! சந்தேகமென்ன? என் ஓட்டு சரோஜ் நாராயணசாமிக்குத்தான்! கே. பி. சுந்தராம்பாள் போன்று சிறிது ஆண்மை கலந்த குரலாக இருந்தாலும், சரோஜ் நாராயணசாமியின் அந்தக் கணீர்க் குரலில் இருக்கும் வார்த்தைகளின் உச்சரிப்புத் தெளிவும், சுத்தமும் யாருக்கு வரும்? கேட்கக் கேட்கக் கேட்டுக் கொண்டே இருக்கத் தூண்டும் அதிசயமல்லவா அது!

* ரூ. 10 பரிசு பெறுபவர்:
இரா. கந்தையா,
15/51, சிவன் கோவில் தெரு,
ஆலடியூர் (அஞ்சல்),
அம்பாசமுத்திரம் (வழி),
நெல்லை மாவட்டம்.

# ரயில் நின்ற ஸ்டேஷன்களிலெல்லாம் மருத்துவம் செய்த டாக்டர்!

**'தலைவலிக்குக் கஷாயம் போட்டுத் தந்து குணப்படுத்துகிற நாட்டுப்புறக் கிழவி கூட எம். டி. தான்... போ!' என்று வெள்ளைக்கார அரசையே எதிர்த்து வாதாடிய டாக்டர் இவர்......**

விசாகப்பட்டினத்திலிருந்து புறப்படுகிற ரயில் சென்னை வந்து சேர முழுசாய் ஒரு நாளுக்கும் மேல் ஆன காலம். அனகபள்ளி, ராஜமகேந்திரி, விஜயவாடா என்று ஒவ்வொரு இடமாக நின்று 'தண்ணீர்' குடித்து வருகிற நீராவி எஞ்சின்.

இந்த வண்டியில் நான் வருகிறேன்' என்று முன்னாலேயே கார்டு போட்டுவிடுவார். டாக்டர் திருமூர்த்தி. வழியிலுள்ள ஒவ்வொரு ரெயில் நிலையத்திலும் அவருடைய மாணவர்களான டாக்டர்கள் தங்களுடைய சிக்கலான பேஷண்டுகளுடன் காத்திருப்பார்கள்.

ரயில் தாமதிக்கிற இடங்களில் எல்லாம் மருத்துவ ஆலோசனை — இலவசமாகத்தான். தவிர மாணவர்களுக்கும் 'டோஸ்கள்' வேறு. ''இந்த நோயை நீ தவருகக் கணித்துவிட்டாய்... இந்த மருந்தைக் கொடு... இப்படி வைத்தியம் பண்ணு...''

இப்படி வைத்தியம் பண்ணிக் கொள்கிற கூட்டத்தில் சம்பந்தப்பட்ட ரயில் நிலையங்களின் அதிகாரிகளும் நாடி பார்த்துக் கொள்வார்களாம்!

நடைமுறையில் அப்பழுக்கற்ற காந்தியவாதி; தேசியவாதி இந்த டாக்டர் திருமூர்த்தி. ஒருசமயம் ஆந்திராவில் மகாத்மாஜி வந்து மூன்று மாதம் தங்கியிருந்தார். சென்னை சர்க்கார், அப்போது மகாத்மாஜியைக் கவனித்துக் கொள்ள என்று அனுப்பி வைத்தது டாக்டர் திருமூர்த்தியை.

காந்திஜி கேட்டார். ''திருமூர்த்தி! நீ கிளினிக் வைத்திருக்கிருயே... நோயால் துன்பப்படுகிறவர்களுக்கு உதவுவதுதானே உன் பணி. நீ அவர்களிடம் பணம் பெற்று வைத்தியம் பண்ணலாமா?''

''நான் பீஸ் எதுவும் வாங்குவதில்லை பாபுஜி. ஏழை, பணக்காரன் யாரானாலும் ஒரேவிதமான வைத்தியம்தான் பண்ணுகிறேன். வசதியுள்ளவர்கள் அவர்களே ஆசைப்பட்டுத் தருகிருர்கள். அப்படித் தந்தால்தான் நோய் குணமாகும் என்றும் சிலர் நம்புகிருர்கள். அவ்வளவுதான்'' என்ருர் திருமூர்த்தி.

அதையும் விட்டுவிடேன்'' என்ருர் மகாத்மாஜி. சென்னை திரும்பியவுடன் திருமூர்த்தி செய்த முதல் வேலை 'கிளினிக்' என்கிற அமைப்பை மூடியதுதான். அந்த வினாடி முதல் யாரானாலும் இலவச வைத்தியம்தான்!

ஊரெல்லாம் ஒரு குழந்தை நோய். அந்த நாளில் அதற்குக் 'கட்டி' என்று பெயர். குடல் வீங்கி, வயிறு பெருத்து — அனேகமாக மரணம்தான் முடிவு என்கிற நோய். ஆங்கில மருத்துவத்தால் எதுவுமே செய்ய முடியாமல் திணறினார்கள்.

சென்னையில் ஒரு நண்பர் தன் குழந்தையோடு அவதிப்பட்டார். ஆங்கில டாக்டர்கள் ஆன மட்டும் முயன்று பார்த்தார்கள். ஒன்றும் முடியவில்லை. டாக்டர் திருமூர்த்திக்கு அந்த விவரம் தெரிந்தது.

விசாகப்பட்டினத்தில் ஒரு மரத்தடி வைத்தியர். காலணா விலையில் ஏதோ சூரணம் விற்றுக் கொண்டிருந்தார். கட்டி நோயை அந்தச் சூரணம் குணப்படுத்துகிறது என்று எல்லோரும் நம்பினார்கள்.

அந்த மரத்தடி ஆசாமியை அழைத்தார் டாக்டர். 'உன் சூரணம் எப்படித் தயாரிக்கிருய்?' என்று கேட்டார். தொழில் ரகசியம். தனக்கு ஏதோ பழைய சுவடியில் கிடைத்த விவரம் என்று சொன்னார் அந்த மரத்தடி. ''யாரிடமும் வெளியிட மாட்டேன்'' என்று சத்தியம் பண்ணிக் கொடுத்துவிட்டு விவரம் கேட்டார். அவரும், டாக்டரை நம்பி, என்னென்ன மூலிகைகள் என்று விவரம் சொன்னார்.

திருமூர்த்திக்கு இப்போது ஒரு நிம்மதி. மரத்தடி மருந்தில் நச்சுப் பொருள் ஏதும் இல்லை என்பது உறுதியாகத் தெரிந்தது. தன்னுடைய பேஷண்டுகளுக்கும் அதை அறிமுகம் செய்தார். காலணாச் சூரணக்காரருக்கு ரயில் கட்டணம் தந்து, சென்னை நண்ப



# குழந்தைகளையும் கொத்தடிமைகளாக்கும் கொடுமை...



இந்தியாவில் 'கார்பெட்' தயாரிக்கும் தொழிலில் பெரும் பங்கு உத்திரப்பிரதேச மாநிலத்திலுள்ள மிர்ஸாபூர் மாவட்டத்தில் தான் நடைபெற்று வருகிறது. ஏறக்குறைய 1500 வீவிங் யூனிட்கள் உள்ளன. இந்தத் தொழிலில் பெரும்பாலும் ஐந்து வயது முதல் பதினைந்து வயதுவரை உள்ள சிறுவர்களே பயன்படுத்தப்படுகிறார்கள். ஏனென்றால், சிறுவர்களின் விரல்கள் சின்னதாக இருப்பதால், கார்பெட்டில் முடிச்சுப் போடுவது அழகாக அமைகிறதாம்! அதனால் அந்த 'கார்பெட்'களுக்கு வெளிநாடுகளில் நல்ல கிராக்கி இருக்கிறதாம்! அதற்காகவே பீகார் போன்ற பக்கத்து மாநிலங்களிலிருந்து சிறுவர்களைப் பிடித்து வந்து கொத்தடிமைகளாய் வேலைக்கு அமர்த்திக் கொள்கிறார்களாம் முதலாளிகள். இப்படி 750900 குழந்தைகள் இந்தத் தொழிலில் அடிப்படை வசதிகள்கூட இல்லாமல் பெரும் அவதிக்கு உள்ளாகி இருக்கின்றனர். இப்படி கொத்தடிமைகளாக இருப்பவர்களை மீட்கும் பணியில் ஈடுபட்டுள்ள பி. எல். எஃப். (Bonded Liberation Front) தலைவர் சுவாமி அக்னிவேஷ், "இந்திய உச்ச நீதி மன்றத்தின் வரையறைப்படி எட்டு கோடி பேர் (80 million) கொத்தடிமைகளாக உள்ளனர். அரசுக் கணக்குப்படி 1,33,000 பேர்தான் 1983 வரை மீட்கப்பட்டிருக்கிறார்கள். இந்தப் பணிக்காக, ஒதுக்கப்பட்ட நிதி இன்னும் முழுமையாகப் பயன்படுத்தப்படாமல் இருப்பதிலிருந்தே இந்த அரசும், அதிகாரிகளும் கொத்தடிமை மீட்புப் பணியில் அக்கறை காட்டவில்லை என்பதைப் புரிந்து கொள்ளலாம் அல்லவா?" என்கிறார்.

— ப்ரியதர்ஷினி

ஆதாரம்: 'கரெண்ட்'

---

ரிடமும் அனுப்பினார். அந்தக் குழந்தையும் குணமடைந்தது.

காலனைச் சூரணக்காரர் அப்புறம் ஆந்திராவுக்குத் திரும்பிச் செல்லவே இல்லை. அமோகமாகக் கொழித்தார். பெரிய ஆலமரமாகவே அவருடைய பணி தழைத்தது. தப்பிப் பிழைத்த நண்பரின் 'குழந்தையே' அந்த நிறுவனத்தின் கட்டடம் ஒன்றைத் திறந்து வைக்கும் பேறைப் பின்னால் பெற்றது.

அந்த மரத்தடி வைத்தியர்தாம் ஐம்மி வேங்கடரமணய்யா என்கிற அகுர சாதனைக்காரர்.

ஆனால், அவரை இனங்கண்டு பயன்படுத்திய டாக்டர் திருமூர்த்தி அகப்பட்டுக்கொண்டார். இந்த மாதிரி 'மரத்தடி மந்திரவாதிகளையெல்லாம் நீ அங்கீகரிக்கலாமா?' என்று மிரட்டியது வெள்ளைக்கார நிர்வாகம். ஆயுர்வேதம், சித்த மருத்துவம் எல்லாம் அந்த நாளில் தீண்டத்தகாதவை. திருமூர்த்தி அசைந்து கொடுக்கவில்லை. "எவன் நோயைக் குணப்படுத்துகிறானோ அவன் தான் உண்மையான மருத்துவன். தலைவலிக்குக் கஷாயம் போட்டுத் தந்து குணப்படுத்துகிற நாட்டுப்புறக் கிழவி கூட எம். டி. தான்... போ" என்கிற மாதிரி வாதம் பண்ணினார். இது திருத்த முடியாத கேஸ் என்று ஆங்கில நிர்வாகமும் விட்டுவிட்டது.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் ஆந்திரப் பல்கலைக்கழகத்தின் துணை வேந்தராகவும் பணியாற்றினார். சில ஆண்டுகள் காலையில் மருத்துவக் கல்லூரி முதல்வர், மாலையில் துணைவேந்தர் என்கிற இரட்டை உத்தியோகம்.

'மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய பணி இந்தத் துணைவேந்தர் பதவி' என்று சொல்லி அதற்குரிய ஊதியத்தையே டாக்டர் திருமூர்த்தி பெற்றுக் கொண்டதில்லை.

ஆந்திர மருத்துவக் கல்லூரி உருவாவதற்குப் பெரும் பணியாற்றியவர் டாக்டர் திருமூர்த்தி. நூற்றுக்கணக்கான ஜமீன்தார்களிடம் நிதி வசூல் செய்து உருவாக்கினார். ஆனால் ஆந்திர மருத்துவக் கல்லூரியின் பொன் விழா கொண்டாடப்பட்டபோது, அதற்கு அடிப்படையாகப் பணியாற்றிய டாக்டர் திருமூர்த்தியை ஒருவர்கூட நினைவு வைத்திருக்கவில்லை!

மருத்துவக் கல்லூரியில் படிக்கும்போதே பி. ஏ. தமிழ் படித்துத் தங்கப்பதக்கமும் பெற்றார் டாக்டர் திருமூர்த்தி! இந்தத் தமிழ்ப் பற்று பின்னால் தமிழிசை, தமிழறிஞர்கள் உறவு என்று வலுவடைந்தது. ரஸிகமணி டி. கே. சி., பேராசிரியர் கல்கி, மூதறிஞர் ராஜாஜி போன்றவர்களின் சங்கத்தில் ஒருவரானார்.

டாக்டர் திருமூர்த்திக்கு நூற்றாண்டு விழாக் காணும் இந்தச் சமயத்தில் அவருடைய நினைவுகளைப் பகிர்ந்து கொண்டவர் அவருடைய மகன் டி. டி. கிருஷ்ணமூர்த்தி.

— 'யெஸ்பால்'

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543).

Assistant Editor: P. S. Mani. Editor: K. Rajendran.

# நெய்ஸரின் பல்வேறு படைப்புகள்... இப்போது நீங்கள் வண்ணத்தைத் தேர்ந்தெடுத்தாலே போதும்



நெய்ஸர் சானிடரிவேர்,
வெள்ளை முதல் கறுப்பு
வரை - எழில் கொஞ்சும்
21 வண்ணங்கள்.

OBM 8776 TM

Neycer

நெய்வேலி ஸெராமிக்ஸ்
அண்ட் ரிஃப்ராக்டரீஸ் லிமிடெட்,
வடலூர் அஞ்சலகம்-607 303.
தென்னாற்காடு மாவட்டம், தமிழ்நாடு.

நெய்ஸர். பாத்ரூமிற்கு நிரந்தர அழகூட்டுவது

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Srilanka